மணி விழா காணுகின்ற
　　　பேறு பெற்றேன் - தூய
மணியாக இந்நாட்டில்
　　　வாழும் நல்லோன்,
கற்பனைக்கும் எட்டாத
　　　அன்பு உள்ளம்
பொற்குடம் ததும்புகின்ற
　　　பாலின் நெஞ்சம்.

மலை மீது ஒளி சிந்தும் மணி விளக்கோ,
விலை மதிக்க முடியாத திருவிளக்கோ,
திருத் தொண்டு செய்கின்ற சுடர்விளக்கோ,
திரு நாட்டில் மின்னுகின்ற பொன்விளக்கோ!

இந்நாட்டின் ஒளிகூட்டி வழிகாட்ட
எந்நாளும் ஆண்டவனை மனமுருகி,
சிரந்தாழ்த்தி, கரங்குவித்து வேண்டுகிறோம்!
ஜி. கே. சுந்தரனார், வாழ்க! வாழ்க!
வாழ்க பல்லாண்டு, வாழ்க அவர் திருத்தொண்டு!



இப்படிக்கு,
Dr. T. N. சிவசங்கரன், I.M.D.
உறுப்பினர்,
தமிழ்நாடு சுதந்திரக் கட்சி.

இராஜாஜி மன்றம்,
முத்துப்பேட்டை P. O.
தஞ்சை மாவட்டம்.

(கவி இயற்றியவர்: கவித் தென்றல் சாக்கை சிவா)



கோவை நகராட்சிக் கலையரங்கில்

15-10-74 அன்று நிகழ்ந்த பாராட்டு விழாவில்

திரு N. A. பரசுராமன் அவர்கள் நிகழ்த்திய

# வரவேற்புரை

விழாத் தலைவர் அவர்களே
மணி விழாக் கொண்ட மாண்புடைத் தம்பதியரே
வாழ்த்துரை நல்க வந்துள்ள பெருந்தகையோரே
விழாவைச் சிறப்பிக்க வருகை புரிந்துள்ள பெரியோர்களே
தாய்மார்களே
அன்பர்களே
நண்பர்களே
தொண்டர்களே
தோழர்களே
கோவைப் பெருங் குடிமக்களே

உங்கள் அனைவருக்கும் மணி விழாக் குழுவின் சார்பில் அன்பான வணக்கங்களை முதற்கண் தெரிவித்துக் கொள்கிறேன்.

எங்கள் உத்தமத் தலைவரும், நம் அனைவரின் அன்பிற்கும், மரியாதைக்கும் உரியவருமான திரு **G. K. சுந்தரம்** அவர்கள் தம் வாழ்நாளில் 60 ஆண்டை முடித்து 61-ல் அடியெடுத்து வைக்கிறார்.

அவர் கடந்து வந்த காலங்களில் சோதனைகள் பல கடந்து சாதனைகள் பற்பல புரிந்து செயல் வீரராகத் திகழ்கிறார்.

அவர் காந்திய நெறி நிற்கும் சத்திய சீலர்
மூதறிஞர் ராஜாஜியின் அருமைச் சீடர்
எம் கட்சித் தலைமைக்கு அண்ணல் கண்டெடுத்த ஓர் நன் முத்து

பஞ்சணையிலும், பட்டு மெத்தையிலும் புரளும் வசதி படைத்திருந்தும் தம் பாதம் நோக உப்பெடுக்க வேதாரண்யம் நோக்கி நடந்த இந் நாட்டின் நன்மகன். பகட்டிற்கும், படாடோபத்திற்கும் ஆசையில்லாப் பெருமகன். திக்கற்றோர்க்கு திசைகாட்டும் திருமகன். கருத்துக்கு இனிய மகன். காட்சிக்கு எளிய மகன். எம் சுதந்திரக் கட்சியின் தலைமகன். நாடு விடுதலை பெற பரங்கியரை எதிர்த்து சிறைசென்ற சீராளன். களங்கமற்ற புன்னகையால் எல்லோரையும் கவருகின்ற ஆற்றல் மிக்கோன்.

அவர் செல்லும் பாதை நேர்மைக்கு எடுத்துக்காட்டு. நீதிக்கு அளவுகோல். வாடிய பயிருக்கு மழையாக, துயரப் பனி நீக்கும் பகலாக துணை நிற்கும் தூயவர். ஆலை அதிபர்தான் ஆனாலும் ஏழை எளியோர்க்கு உற்ற நண்பர். தலைவர்தான் ஆனாலும் தொண்டர்க்குத் தோழர். கடமை தவறாதபோது கனிவு காட்டுவார். கடமை தவறும் போது கடுமை காட்டுவார். நீதிக்குப் பின் பாசம் என்பதே அவர்தம் கொள்கை. பதவி அவருக்கு தூசு. சேவை அவருக்கு மூச்சு.

இந்தப் பெருமகனார் ஈடுபடாத துறைகளே இல்லை. தொழில், அரசியல், இலக்கியம் ஆன்மீகம் அத்தனையும் இவருக்குக் கைவந்த கலைகள். அத்தனையிலும் நேர்மையே இவர் மூச்சு; பேச்சு; ஏன், எல்லாமே அதுதான்.

அருங்குணவதியாம் நீலவேணித் தாயார் அவர்களை மனையாளாகப் பெற்றார். அன்புக்கு ஒரு மகளையும், ஆஸ்திக்கு இரு மகன்களையும் பெற்றார். நிறை வாழ்வு வாழும் இப் புனிதரின் மணி விழா - பெரு விழாவில் பங்குபெற வந்திருக்கும் உங்கள் அனைவரையும் உளமார மனமார வருக வருக என்று வரவேற்கிறேன். குறிப்பாக காரைக்குடி விட்டு பல நாட்கள் முன்னதாகவே இவண்வந்து மணி விழா சிறக்க ஆவன அனைத்தும் செய்ததோடு எங்கள் விருப்பத்திற்கிணங்கி இப் பெரு விழாவின் தலைமைக் கட்டிலை அலங்கரிக்கும் சட்டை போடாத் தலைவர், முந்தைய சா. கணேசன் இன்றைய **கம்பன் அடிப்பொடியாரை** கரம் கூப்பி சிரம் தாழ்த்தி வருக வருக என வரவேற்கின்றேன்.

மற்றும் பாராட்டுரை வழங்க வருகை தந்திருக்கின்ற இன்சொல் அரசி **திருமதி சந்திரகாந்தி கோவிந்தராஜுலு** அவர்களையும், நகரத் தந்தை திரு **சுக்கூர்** அவர்களையும் பெருவணிகர் திரு **S. R. P. பொன்னுசாமி செட்டியார்** அவர்களையும், தமிழக சட்ட மன்ற உறுப்பினர் திரு **வெங்கிடுசாமி** அவர்களையும், தமிழக மேலவை உறுப்பினர் திரு **G. சுவாமிநாதன்** அவர்களையும், திரு **ரா. கிருஷ்ணசாமிக் கவுண்டர்** அவர்களையும், முனிசிபல் கவுன்சிலர் திரு **ராமசாமி** அவர்களையும், திரு **அழகிரிசாமி** அவர்களையும், **குருஜி நான்ஜி** அவர்களையும், **V. S. ஸ்ரீகுமார்** அவர்களையும், **தேவநாதன்** அவர்களையும், **T. R. சங்கர நாராயணன்** அவர்களையும், **திருப்புவனம் ராமசாமி** அவர்களையும் மற்றும் எல்லோரையும் **வருக வருக** என வரவேற்று இந்த விழா நாளில் பங்கு கொண்டு சிறப்பிக்குமாறு கேட்டுக்கொள்கிறேன். வணக்கம்.


*With best compliments from*



**RAMCO SWADESHIS**

WHOLESALE PIECE GOODS MERCHANTS

COIMBATORE & MADRAS

*Wishing*

**Shri G. K. S.**

*many happy returns*



**THREE SHOPS**

*For*

**QUALITY FABRICS**

# Ramoo & Co.

**R. S. PURAM**

Phone: 24397

**AVANASHI ROAD**

Phone: 25124

**CROSS-CUT ROAD**

Phone: 25889

**COIMBATORE**

ஓம்.

# முன்னுரை

சுந்தரம் என்ற சொல் அழகு, வண்ணம், நன்மை, மங்கலம் என்றெல்லாம் பொருள் பொதிந்தது. 'சு' என்ற எழுத்தே இப் பொருள் கொண்டு வடமொழிச் சொற்களின் முன்வரும் ஒரு சொல் ஆகும்.

இன்று மணிவிழாக் கொள்ளும் நமது அன்புக்கு உரிய திருவாளர். ஜி.கே. சுந்தரம் அவர்கள் நமது பெயருக்கு உள்ள பொருள்களுக் கெல்லாம் உறையுளாகத் திகழ்கின்ருர். அவர்தம் உள்ளம், உரை, செயல், யாவும் அழகும், வண்ணமும், நிறைந்து நன்மையே—மங்கலமே—பயப்பன. அன்பும் அறமுமே இரு கண் எனக்கொண்டு வாழ்பவர்.

தெய்வப் பற்று, நாட்டன்பு, கலை ஆர்வம், சமரச நோக்கு, தொண்டுக்கம், கொள்கைப் பிடிப்பு முதலிய பண்பாடு நிரம்பியவர். உள்ளத்தாலும் எவர் ஒருவருக்கும் கேடு சூழாதவர். எக்காலும் நேர்மை பிறழாத நெறியினர்.

கம்பன் பால் பெரிதும் ஈடுபாடு கொண்டவர். அதனல் கம்பன் அறநிலையின் அறங்காப்பாளராக இருந்து பேருதவி புரிந்து வருகிருர். கோவையில் கம்பன் கழகத்தை நிறுவி அதன் தலைவராயிருந்து சிறந்த பணியாற்றி வருகிருர்.

இத்தகைய செந்நெறிச் செம்மலை, அவர்தம் மணிவிழாவில் மனம் குளிர, வாய் மணக்க, வாழ்த்தி மகிழ்வதில் கம்பன் கழகம் பெருமிதம் கொள்கிறது.

ஆறு—பத்து ஆண்டுகள் நிரம்பும் அறச்செல்வரை ஆறு-பத்துப் பாடல்களால் வாழ்த்துவது சாலப் பொருந்தும் எனக் கருதினேம். கம்பன் கழகக் கவிஞர்கள் நால்வர் கைகொடுத்து உதவினர்கள்.

கவிஞர் தேசிகன் அவர்கள் காக்கப்பத்தையும், கவிஞர் கம்பராமன் அவர்கள் வாழ்கப்பத்தையும், கவிஞர் பசுபதி அவர்கள் மகிழ்கப்பத்தையும், கவிஞர் அரங்க சீனிவாசன் அவர்கள் பொலிகப்பத்தையும் யாத்துத் தந்தனர். இவர்கட்கு என்றும் மறவா நன்றியுடையோம்.

"துங்க நிறை திரு.ஜி.கே. சுந்தரனர்
தமைக்காத்து, சுற்றம் காத்து,
இங்கிவர்தம் மனைகாத்து, எழில்மக்கள்,
மருமக்கள் இலங்கக் காத்து,
பொங்கிவளர் தொழில்காத்து, புகழ்காத்து,
இக்குடியின் புனிதம் காத்து,
சங்கரனே! திருமாலே! சதுர்முகனே!
பல்லாண்டு தழைக்கச் செய்வீர்"

என்று, உலகம் யாவையும் படைத்துக் காக்கும் அலகிலாப் பரம்பொருளின் அடிபரவி வேண்டி இந்த ஆறுபத்து மணிமாலையை எங்கள் உழுவலன்பர் ஜி.கே. சுந்தரம் அவர்கட்கு அணிவிக்கின்ரேம்.

வாழ்க உலகம் எல்லாம்

கோயம்புத்தூர்
ஆனந்த ஆண்டு
புரட்டாசி உத்தரநாள்,
14—10—1974.

இங்ஙனம்
கம்பன் அடிப்பொடி,
செயலாளன், கம்பன் கழகம்
காரைக்குடி-2.

# காக்கப் பத்து

[திரு: க. தேசிகன்]

1
ஆனந்த

மேருமலைப் பொன்னேட்டில் கோடு கொண்டே
மிக்கபுகழ்ப் பலகோடிட் டெழுதும் தெய்வம்,
ஊருணிபோல் எளிதாக உதவிசெய்யும்
உயர்பண்பின் சுந்தரன்றன் உளமா மேட்டில்
கூர்மதியும் மெய்யுணர்வும் ஒழுங்கும் வாழக்
கொடைபுரியும் குறிப்பெழுதி வைத்த கொண்டல்,
சீருறுநல் அறுகுபுனை செங்கண் மூர்த்திச்
சேவடிகள் துதிக்கின்றோம் காக்க வென்றே!

2
ராக்ஷச

அறம்தழைக்கப் பொழிகின்ற மேக மாக
அம்புபொழி சாரங்கம் திகிரி சங்கம்
பிறங்கலொடு திகழ்தல்போல் எழுந்து நிற்கும்
பெருமானே! சுந்தரனும் நின்னை போலச்
சிறந்ததமிழ்ப் பாவடியில் நெஞ்சம் சேர்த்துச்
சென்னியில்நின், சேவடிகள் பொலியச் சேர்த்தான்
அறிந்தவெலாம் பிறர்வாழக் கொடுக்கும் வாழ்வே;
அழகா!நீ யவன் மகிழக் காக்க வாராய்!

3
நள

நறுநீலம் செங்கமலம் தழுவக் கண்டேன்,
நளிர்கடலைச் செம்பரிதி நாடல் கண்டேன்,
செறிதோகை மயிலோடு முருகா! உன்னைச்
சேர்த்தெனது கற்பனையில் செழிப்பைக் கண்டேன்,
வெறியாடும் அரசியற்பே ரலைகள் மேலே
வெண்ணிலவின் அமுதமென முறுவல் பொங்கும்
நெறியாளன் சுந்தரனைக் காக்க வென்றே
நினக்குரிய தமிழ்படித்தேன் நின்தாள் காப்பே!

4
பிங்கள

கன்னியர்க்கு மணிப்பொய்கை, மதன வேளின்
கடுமைக்குத் தழற்குண்டம்; கனிந்த தொண்டர்
சொன்னபடி செயுந்தலைவன், சுழித்த நெஞ்சர்
சோர்ந்துவிழப் பெருவிரலால் மிதிக்குந் திண்மை;
என்னினிய சுந்தரன்பால் இனைய கண்டேன்
இடப்பாகம் எழிற்பசுமை கொண்ட எந்தாய்!
பொன்னினிய மலர்ச்சடையாய்! நீல கண்ட!
புகழாளன் றனைக்காக்க வருக! போற்றி!

5
காலயுக்தி

உண்மையிருந் தரசாள உற்று நோக்கும்
ஒருகுழந்தை, நான்குமுகம், பதும பீடம்,
தண்மதியின் பிறைக்கதிர்வெண் பூணு லாகத்
தவழ்ந்தொளிரும் வேதநெறித் தவக்கொழுந்தை,
எண்ணியது நிறைவுசெயும் சுந்தரன்றன்
எழிற்சாந்தி நல்லோரை வலக்கரத்தால்
புண்ணியமாங் கரகத்து நீர்தெளிக்கப்
போதருக! காக்க!எனப் போற்றி செய்வாம்.

ஆகாயப் பெருவெளியாம் நீல மேனி 6
  அழகம்மைக் கேந்துசுடர் அண்ட கோடி— சித்தார்த்தி

பாகான வீணையிசை— குளிர்ந்த நோக்கில்,
  பழமையெலாம் புதுப்பிக்கும் வெகுண்ட பார்வை

மீகாமன் துறைகாண நீல வானில்
  மின்னுகின்ற விண்மீனை வெற்றித் தாயை

நீகாக்க எனத்தொழுதோம்: சுந்தரன்றன்
  நெறி காக்கக் கொற்றமெலாம் நிலைக்கும் அம்மா!

தந்தையருள் மார்வத்தே தார மாகத் 7
  தனியரசு புரிகின்ற தாயே! எங்கள் ரௌத்திரி

சுந்தரனை நடுவைத்தோர் வட்டம் சுற்றித்
  தொடர்ந்துபல சோபனங்கள் சூழச் செய்யும்

மந்திரமே நீயாகி வருவா யம்மா!
  மாமகளுன் திருவடியைச் சென்னி கொண்டு

செந்தமிழில் மணம்சேர்த்த கம்ப நாடன்
  சீர்த்தொண்டன் சுந்தரனைக் காக்க வென்றே!

மலர்ப்பாதம் தமிழ்ப் புலவர் நாவே யாக 8
  மகிழ்ந்திருக்கும் பளிங்குமனத் தாயே வாழ்க! துன்மதி

கலப்பேது மில்லாத தூய்மை யென்னும்
  கற்பனை வெண் தாமரைப்பூக் களித்த வாழ்வே!

வலப்பாதம் எடுத்திங்கு வைப்பாய் நெஞ்சில்
  வயங்குமணி மண்டபத்துச் சால்புத் தானே!

உலப்பேதும் தொடராத தெளிந்த சொல்லின்
  உத்தமியே! சுந்தரனைக் காக்க வாராய்!

குறிஞ்சிமுல்லை மருதப்பூப் பாலை நெய்தல் 9
  கோத்தணிந்த தமிழ்த்தாயே! யாழ்கை யேந்தி! துந்துபி

“அறிந்தபுலன் ஐந்தும்தன் மனையாள் இன்பத்
  தடங்கிவரின் கற்”பென்பர், இந்தப் பண்ணைச்

செறிந்ததமிழ்ப் பாவாக வடித்த கம்பன்
  சித்திரமா மண்டபத்தே செழிக்கப் பாடி

வெறுந்தரையை வானுலகின் கீத மாக்கும்
  வித்தகியே! சுந்தரன் சீர் விரும்பிக்காக்க!

புரண்டோடி மோதாமற் புவன மெல்லாம் 10
  போதற்காம் ஒழுங்கொன்றில் திளைத்த கம்பா! ருத்ரோத்காரி

உருண்டோடும் நினைவுகளில் அறங்கள் சேர்த்திவ்
  வுலகோரின் வென்றிக்கே இராம நாமம்

திரண்டோத வகுத்திடுவாய் தெய்வக் காதை;
  திளைத்திடுவான் சுந்தரனும்; கணேச னேபோல்

இரண்டோத அறியான்காண் இவனைக் காக்க!
  ஈடில்மணி மண்டபத்தே இருக்குந் தேவே!

# வாழ்கப் பத்து

[திரு: கம்பராமன்]

11
ரக்தாட்சி

மங்க லந்தரு பாரத தேவியின்
மறுவி லாத பதத்தினிற் பூட்டிய

சங்கி லித்திரள் யாவும் பொடியுறத்
தகவி னேடு சிறைசென்ற நாயகன்:

கங்கை காவிரி யொப்பப் புனிதமே
கமழுந் தூய வுளமுறு நாயகன்

திங்கள் நாணப் பொலிவுறு நாயகன்:
ஜி.கே. சுந்தரம் வாழிய! வாழியே!

12
குரோதன

புண்ணி யம்பொதி செந்தமிழ் நாட்டினில்
புனிதர் நெஞ்சத் தினிதெழு நான்மறை

கண்ணி யஞ்செறி கம்பன் வழங்கிய
கவிதை யொப்பக் களிதரு கோபுரம்

பண்ணி றைந்தொளிர் கோவில் இவையெலாம்
பரிவி னன்கு புரந்து புகழ்பெறும்

திண்ணி தாய குலம்செய் தவமனன்,
ஜி.கே. சுந்தரம் வாழிய! வாழியே!

13
அக்ஷய

காலம் மூன்று மினிதுணர் மேன்மையான்
கல்வி நல்கு பயன்தெரி நோன்மையான்:

சீலம் யாதெனத் தேர்ந்தறி தூய்மையான்;
திட்ப மோடு பகர்ந்திடு வாய்மையான்:

ஞாலம் போற்றச் சிறப்புறும் அந்தணன்;
நல்ல றத்தின் திறம்வளர் சிந்தையன்:

சேலம் நல்குரா ஜாஜி மதித்திடும்
ஜி.கே. சுந்தரம் வாழிய! வாழியே!

14
பிரபவ

எங்கள் நாட்டுக் கடல்தரும் உப்பினுக்
கெண்ண மின்றி வரியை விதித்தனே:

பங்கம் மிக்க கொடுமை புரிந்தனே:
பரிவி லாதுன் கொடுமையைப் போக்குவோம்;

பொங்கு நெஞ்சக் கனலில் பொசுக்குவோம்;
புன்மை யாட்சியே! போவெனும் போரினில்

சிங்க மென்னப் பெருமிதத் தோடெழும்
ஜி.கே. சுந்தரம் வாழிய! வாழியே!

15
விபவ

பன்னு நான்மறை யுச்சியின் தீபமாய்
பரவு காந்திகன் னெஞ்சத் தமுதமாய்

மன்னி லட்சியம் காக்கும் கவசமாய்
மருவு வெம்பிணிக் குற்றசஞ் சீவியாய்

நன்ன யஞ்செரி யன்புக் குயிரதாய்,
நாடு போற்றுசத் யாக்கிர கந்தனே

சென்னி மேற்கொண்டு வெஞ்சிறை சென்றுயர்
ஜி.கே. சுந்தரம் வாழிய! வாழியே!

வெள்ளைத் தாமரைப் பூவி லிருப்பவள் 16
வீற்றி ருந்து மகிழ்வுறக் கோவிலாய் சுக்கில

கொள்ளைத் தீய பிணிகளைப் போக்கிடும்
கோதி லாத மருத்துவச் சாலையாய்

வள்ளல் கம்பன் மணிமண் டபத்திரு
வளர்வ தற்குத் தனிப்பெரும் சத்தியாய்

தெள்ளி தாவளர்க் தோங்குசெல் வங்கொள்
ஜி.கே. சுந்தரம் வாழிய! வாழியே!

பொய்ம்மை மிக்க அரசியற் சூழ்ச்சியைப் 17
பூண்டி லாமல் ஆக்கிடும் ஞானமாய் பிரமோதூத

மெய்ம்மை யன்புடன் ஆட்சி புரிந்திட
வீறு பெற்றுத் திகழ்வுறு கோவிலாய்

வெம்மை யாவையும் போக்கிடு சேவையாய்
மேவு கின்றனார் கட்சியைக் காத்திடும்

செம்மை மிக்க வுளம்பெறு தூயவன்
ஜி.கே. சுந்தரம் வாழிய! வாழியே!

அவ்வி யத்தினில் தோன்றிய கொள்கையால், 18
அறிவி லார்புரி யாட்சி மயக்கினால், பிரஜோற்பத்தி

வெவ்வி தாகிய சட்டச் செருக்கினால்,
மேவு துன்பப் புயலை யொழித்திட

கவ்வை யற்றநல் லன்பு வளர்ந்திடக்
காந்தி நன்னெறி மேற்கொளல் நன்றெனும்

திவ்வி யஞ்செறி கொள்கை வளர்த்திடும்
ஜி.கே. சுந்தரம் வாழிய! வாழியே!

அஞ்சல்; ஏந்திடு கைதனில் வில்லினை; 19
அன்பி லார்களை வெல்லுதி, வெல்லுதி; ஆங்கீரச

விஞ்சும் இவ்வுயிர் நித்தியம்; சத்தியம்;
மேவு கின்றவை யாவுமே யான்என

வஞ்ச மற்றநற் கீதையைப் பேசிய
வாசத் தண்டுள வம்புனை நாயகன்

செஞ்ச ரண்சரண் என்று தினம்கொளும்
ஜி.கே. சுந்தரம் வாழிய! வாழியே!

வந்த வர்க்கு நிழல்தரு கற்பக 20
மாம ரம்மென மக்களும் சுற்றமும் ஸ்ரீமுக

சந்த தம்மகிழ் இல்லத் தரசியும்
சார்ந்த அன்பரும் நண்பரும் போற்றிட

விந்தை மிக்கநற் கம்ப னடிப்பொடி
வீறு பெற்ற தமிழினில் வாழ்த்திடச்

சிந்தை யோங்கும் களிப்பு நிறைந்திட
ஜி.கே. சுந்தரம் வாழிய! வாழியே!

## வளர்கப் பத்து

[திரு: கம்பன் அடிப்பொடி]

21
பவ

வழிவழி எம்மை ஆண்டு
வளம்பல அருளிக் காக்கும்
விழிநுதற் பிள்ளை யாரின்
மென்கழல் தொழுகின் றேனல்,
பழிஎதும் இல்லா, நல்ல,
பயன்நனி சுரக்கும், தூய
தொழில்புரி கோவை ஜீ.கே.
சுந்தரம் வளர்க என்றே!

22
யுவ

வேயுறு தோளி பங்கன்
விளங்குசீ தேவி மார்பன்
தாயெனும் வாணி நாவன்
தமதடி போற்று கின்றேன்,
தூயநல் அறங்கள் காக்கும்
சுந்தரம் வளங்கள் ஓங்கி
ஆயிரம் பிறையும் கண்டே
அப்பாலும் வளர்க என்றே!

23
தாது

காவிரி நாப்பண் ஏழு
கடிமதில் அரங்கந் தன்னுள்
தேவிகால் வருட ஆதி
சேடனில் துயிலும் மாலே!
ஓவிய மலர்நேர் நின்றன்
ஒண்கழல் வண்ணப் பூக்கள்
தூவியான் வணங்கு கின்றேன்
சுந்தரம் வளர்க என்றே!

24
ஈச்வர

ஏராள மாக ஈட்டி
எழிலறம் துலங்கப் பொன்னைத்
தாராள மாக ஈயும்
தகைமிகு சுந்தரப்பேர்ச்
சீராளன் வளங்கள் ஓங்கித்
தினந்தினம் வளர்க என்று
வாராளும் வள்ளி காந்தன்
மலர்அடி வாழ்த்து வேனே!

25
வெகுதானிய

செந்திருவும் மாலும் முன்னர்ச்
சீதையுடன் இராமன் ஆகி
வந்தமுழு அவதா ரத்தின்
மணிக்கதையை வடித்த ளிக்கும்
எந்தைபிரான் கம்பன் பாதம்
ஏத்துகிறேன் கோவை ஜீ.கே.
சுந்தரந்தான் சுற்றம் சூழச்
சுகிர்தமுடன் வளர்க என்றே!

சுதந்திரக் கட்சி போற்றும் 26
தூயநல் தலைவன், மக்கள் பிரமாதி

இதம்பெற உழைக்கும் ஏந்தல்
இசைநிறை சுந்த ரந்தான்

சதம்பல கண்டு நாளும்
தமருடன் வளர்க என்று

மதம்பல சுட்டும் ஒன்றை
வணங்கிடும் கம்பன் கூட்டம்.

ஆயபல் தொழில்கள் ஆக்கி 27
அனைத்தையும் வளர்த்துக் காத்துத் விக்கிரம

தேயமும் செழிக்கச் செய்யும்
சீலமே நோற்று நாளும்

மாயவன் செய்ய பாதம்
மறந்திடா மனத்தன் ஆன

தூயவன் கோவை ஜி.கே.
சுந்தரம் வளர்க மாதோ!

தூயவாம் நூல்கள் நூற்றுத் 28
துணிமணி நெய்து நல்ல விஷு

சாயங்கள் ஏற்றி அஃதைச்
சலவையும் செய்து பாருக்(கு)

ஈயுநல் குப்புச் சாமி
இலக்குமி நோற்ற மைந்தன்

தோயுநல் அன்பன் ஜி.கே.
சுந்தரம் வளர்க மன்னே!

இலக்குமி ஆலை ஆதி 29
எண்பல தொழில்கள் எல்லாம் சித்திரபானு

புலக்குரித் தாகப் பேணி
பொருள்வளம் கூட்டி. நாட்டின்

அலக்கணைப் போக்கி என்றும்
ஆக்கமே விளைக்கும் நல்லோன்

சொலற்குரித் தான கீர்த்திச்
சுந்தரம் வளர்க ஓங்கி!

இல்லறம் போற்றல் போல 30
எழில்தரும் சீலம் நோற்று சுபானு

மில்லறம் ஒளிரக் காத்து
வினைபயன் பெருக்கி யஃதைப்

பல்லறம் செழிக்க ஈந்து
பாரவர் மதிக்க வாழும்

சொல்லறம் தவறுச் செம்மல்
சுந்தரம் வளர்க நன்றே!

# மகிழ்கப் பத்து

[திரு: ம. வே. பசுபதி]

31
தாருண

ஏரார் இளங்கிளி! இங்கேவா!
கோவை எழிலரசன்
சீரார் இலக்குமி பாலன்
செழுங்குப்பு சாமிமகன்
பேரார் தொழிற்சாலை யாவையும்
போற்றும் பெருமகனும்
சீரார்எம் சுந்தரன் என்றும்
மகிழ்கெனச் செப்புவையே!

32
பார்த்திப

பச்சைப் பசுங்கிளி! பேசுநீ
தீஞ்சொல்! பெரிதுயர்ந்த
விச்சை நலம்வலான், வேண்டும்
அளிமிக்கான், வெற்றியினன்
இச்சை மிகச்சுந் தரனைநேர்
கண்டே எழிற்குரலால்
மெச்ச மிளிர்ந்து நிறைந்தாய்
மகிழ்கென வாழ்த்துவையே!

33
விய

அன்னை சுரக்கிளி! ஆன்ற
இறைபக்தி அஃதுடனே
பின்னும் அறமும் மிளிர்கல்வித்
தொண்டும் மிகவுயர்ந்த
நன்மைக் குணமும்கொள் நம் ஜி.கே.
சுந்தரன், நாட்டமிகும்
தன்மை புகழ்ந்து தமிழால்
மகிழ்கெனத் தந்துரையே!

34
சர்வசித்து

பாலுண் கிளியேநம் கம்பன்
அறநிலைப் பண்பினருள்
ஏலுமோர் வள்ளல், வழிவழி
நாட்டுப்பற் றேற்றுயர்வான்,
மேலும் இராஜாஜி மேதைத்
தொடர்பால் மிளிர்தருவான்,
சீலம் மிகுசுந் தரனார்
மகிழ்கெனச் சீருரையே!

35
சர்வதாரி

நேசக் கிளியே! நமதுநல்
நாட்டின் நிலையுணர்ந்த
பாசச் சுதந்திரக் கட்சித்
தலைவன்; பலர்புகழும்
ஆசற் றெழுபான் இலக்கம்
செலவான் மருந்தகமே
தேசத்திற் கீந்த திறலோன்
மகிழ்கெனத் தீர்ப்புரையே!

மழலைக் கிளியே! வாழ்வாங்கு 36
வாழும் மனம்சிறந்த விரோதி
பழந்தேச பக்தன்; பரதத்தாய்
வாழப் பயில்மறைக்காட்
டுழந்தநல் உப்புச்சத் யாக்ரகி,
நங்கள் உளமுறைவான்,
வழங்கச் சலியான் — நலமே
மகிழ்கென வாழ்த்துவையே!

நல்ல கிளியே! நலமார் 37
தொழில்கள் நடத்துதிறம் விகுர்தி
வல்ல வளத்தன்; எனினும்
கருப்பு வகைஎனுமச்
சொல்லும் வெறுப்பன்; உலகில்
இவனே நம் சுந்தரனும்
வெல்லும் நலத்தன் மிகவும்
மகிழ்கென வேட்புரையே!

அன்புக் கிளியே! கடவூர் 38
அபிராமி தன்னருளால் கர
இன்புற் றறுபானும் ஆண்டு
நிறைநாள் இனிதடைந்தான்
மன்சுற்றஞ் சூழப் பலகோடி
யாண்டுகள் மன்னுதலோ
டென்சுற்றச் சுந்தரன் நீடு
மகிழ்கென ஏத்துவையே!

காதற் கிளியே! வழிவழி 39
ஓங்கிக் கருத்துறுநற் நந்தன
சீத வளங்கள்தாம் மேலும்பல்
கோடி செழிப்புறவே
யாதினும் நல்ல இனியன்
எமதருஞ் சுந்தரனும்
போதன்எப் போதும் புகழ
மகிழ்கெனப் போற்றுவையே.

தத்தாய்! சுதந்திரம் தந்த 40
திருக்கூட்டந் தன்னிலுயர் விஜய
முத்தாய் விளங்கும் திருவாளன்
சுந்தரம், மோகனஞ்சேர்
சித்தம் அழகியான், சீர்பாடிக்
கம்பன் திருக்கழகம்
நித்தம் மகிழ்கென வாழ்த்தும்
உரைதனை நீ இசையே!

# பொலிகப் பத்து

[திரு: அரங்க சீனிவாசன்]

41
ஜெய

கல்வியிற் பெரிய கம்பனைப் பரப்பக்
காரையிற் கண்டநற் கழகம்,
பல்விதத் தாலும் வளர்ந்திட உதவும்
பண்பினை என்சொலிப் புகழ்வோம்!
செல்வமிக் குயரும் கோவையும், கம்பன்
செழுங்கவி அமுதுணச் செய்தாய்!
நல்வினைப் பயனால், எங்களுக்கு அமைந்த
நண்பனே! பொலிகநின் உறவே!

42
மன்மத

கோவையின் நடுவிற் பொலியும்முத் தினைப்போற்,
கோவையிற் பொலிந்திடும் முத்தே!
பூவைநன் மேனி இராகவற்கு உள்ளப்
பூவைஅங் களித்திடும் கம்பன்
பாவை,ஆய் மனத்தாய்! பரிமளப் பதுமப்
பாவையின் பெயரில், இந்நாட்டுத்
தேவையை அறிந்தே ஆலைகள் பேணும்
செல்வனே! பொலிகநின் புகழே!

43
துன்முகி

"அறிவியல் அறியார், பொறியியல் தெரியார்;
அரும்பெருந் தொழில்களை வளர்க்கும்
நெறியினில் முனையார்" என்றிடும் இகழ்ச்சி
நீங்கிடும் வண்ணமே முயன்று
பொறியியல் கண்ட, புதுமைகள் பலவும்
புண்ணிய நாட்டிடை வளர்த்தல்
குறிஎனக் கொண்டுஎம் தலையினை நிமிர்த்த
குரிசிலே! பொலிகநின் தொழிலே!

44
ஏவிளம்பி

தழைப்புற அருள்கூர் மோகன முனிவர்
சாற்றிய நல்லற வழியில்,
உழைப்பவர் உழைப்புச் சிதறுறா வண்ணம்
ஒன்றுறத் திரட்டிஅப் பயனைப்
பிழைப்புறு மாந்தர் துய்த்திடப் புரக்கும்
பேரறங் காவலன் ஆனாய்!
மழைப்புயல் துளியின் வளர்கநின் வாழ்நாள்!
வாரியிற் பொலிகநின் வளமே!

45
விளம்பி

உப்பினைக் கொள்கென்று ஓலமிட்டு அழைத்தே
உவர்க்கடல், முற்றுகை யிடல்போல்
முப்புறம் சூழ்ந்து சொரியினும், எடுக்க
முனைவது குற்றம்என்று அயலார்
செப்பிய கொடுமை தடுப்பதற் காகச்
சிறையிடைத் தவம்செயல் உவந்தாய்!
இப்புவி மகிழ மணிவிழாக் கொள்ளும்
ஏந்தலே! பொலிகநின் பணியே!

தனிமுடி இல்லை ஆயினும், உலகம் 46
"சக்கர வர்த்தி" என்று அழைக்கும் விகாரி

முனிவரன் ஆன நம்இரா ஜாஜி
முன்னர்வைத் திடும்அடிச் சுவட்டிற்

கனிநறுஞ் சோலை சூழ்மறைக் காட்டிற்
கட்டதை மீறிஉப்பு எடுக்க,

இனியநல் லடிகள் பெயர்த்திட முந்தும்
ஏந்தலே பொலிகநின் துணிவே!

"எழில்"என நிகண்டு பொருள்உரைத் திடினும், 47
இனிய"சுந் தரம்" எனும் பெயர்க்குத் சார்வரி

"தொழில்"என, "இதயத் துணிவு"என, "வாய்மைச்
சுடர்"என, "நேர்மையே" என்ன

மொழிபல பொருளும் புதுவதின் அமைய
முகிழ்த்திடும் சுந்தரச் சுடரே!

வழிவழி வளர, நின் மனத்து அருளின்
வளம்எனப் பொலிகநின் அறமே!

காலமும் உன்தன் மணிவிழாக் கண்டு 48
களித்ததென் றல்,அது வியப்போ? பிலவ

சால "ஆனந்த" எனும்பெயர் பூண்டு
சார்ந்தமை, தக்கசான்று அன்றோ!

கோலமார் பறம்புச் சுனைப்புனற் சுவைபோற்,
குளிர்அருட் சொல்அமு துடையாய்!

தாலம்உள் ளளவும் இசையினை நிறுவும்
சதுரனே! பொலிகநின் வாழ்வே!

நினைத்தது சொல்லாய்ச் சொன்னது செயலாய் 49
நெடுங்கரம் தொட்டது பொன்னாய் சுபகிருது

அனைத்துநல் வளமும் அடையினும், "அணியும்
அணிகலன் பணிவு"எனக் கொண்டாய்!

தினைத்துணை யதனைப் பனைத்துணை யாகச்
செய்திடும் சித்துவல் லவனே!

மனைத்துணை யுடனே மக்களும் உவப்ப
மாண்புடன் பொலிகநின் மனையே!

காவியக் கம்பன் கவியின்உட் பொருள்போல் 50
கம்பனின் அடிப்பொடி மனத்தில் சோபகிருது

மேவிய மாசில் அன்பின்ஊற் றினைப்போல்
வில்இரா கவன்மனத்து அருள்போல்

தேவிஅச் சீதை ஆசியிற் 'சொல்லின்
செல்வன்'அங் கெய்துசீ ரினைப்போல்

பாவியல் அறிந்த மனத்துஉணர் வினைப்போல்
பாரினிற் பொலிகநின் திருவே!

## பல்லாண்டுப் பத்து

[திரு: கம்பன் அடிப்பொடி]

51
குரோதி

சித்தமெலாம் அன்பரும்ப,
செய்கையெலாம் அறம் மலர,
எத்திசையும் புகழ்மணக்க,
இரும்பயனர் தொழில்வளர்க்கும்
உத்தமன்எம் சுந்தரற்கு
ஒருகைமுகன் திருவடிகள்
பத்தியுடன் பணிந்தேத்திப்
பல்லாண்டு கூறுதுமே!

52
விசுவாவசு

நல்லோர்கள் பாராட்ட
நாளுமுயர் இலக்குமிசேர்
'மில்' ஆண்டு தமிழகத்தில்
மிளிர்ஜிகே சுந்தரற்கு—
மல்லாண்ட திண்தோளான்
மணிவண்ணன் சேவடிக்குப்
பல்லாண்டு நாம்பாடிப் —
பல்லாண்டு கூறுதுமே!

53
பராபவ

வருடமது ஆனந்தா:
மதிகன்னி; உத்தரநாள்;
தரமிகுகுப் புச்சாமி
தனையனென வந்துதித்த
விரவுபுகழ்ச் சுந்தரனார்
மேன்மையெலாம் நனிசிறக்கப்
பரமசிவன் கழல்பாடிப்
பல்லாண்டு கூறுதுமே.

54
பிலவங்க

எடைதூக்கி அளந்துரைக்கும்
இயல்பாளன். எழில்ஒளிரும்
நடைகாக்கும் திருவாளன்,
நல்லறங்கள் தமைப்புரக்கும்
கொடையாளன், சுந்தரம்தன்
குடிமுழுதும் தழைத்தோங்கப்
படைதொழிலான் தாள்பாடிப்
பல்லாண்டு கூறுதுமே!

55
கீலக

இதம்கருதி மறைக்காட்டில்
இராஜாஜி தலைமையின்கீழ்
சுதந்திரப்போர் செய்துசிறைத்
துயர்மகிழ்ந்த சுந்தரனார்
நிதம்வளரும் திருவோங்கி
நிலவிடவே திருமுருகன்
பதயுகத்தை நெடிதேத்திப்
பல்லாண்டு கூறுதுமே!

உற்றவர்கள் ஆனோரும்
ஊரவர்கள் தாமவரும்
கற்றவர்கள் எல்லோரும்
கல்லாத நல்லோரும்
சொற்றவரும் தூயனெனத்
தொழுதேத்தும் சுந்தரற்குக்
கொற்றவைதன் அருள்வேட்டுப்
பல்லாண்டு கூறுதுமே!

57 சாதாரண

எதுவைத்துக் கணித்தாலும்
எத்துணையும் குறையில்லான்,
மெதுவைத்த நாவுடையான்,
மெய்வைத்த நெஞ்சுடையான்,
பொதுவைத்த திருவுடையான்,
புகழுடையான், சுந்தரற்குப்
பதுமத்தாள் திருவேட்டுப்
பல்லாண்டு கூறுதுமே!

58 விரோதிகிருது

சேரதிகப் பெருந்தொழில்கள்
செழிக்கின்ற காரணத்தால்
சீரதிகம் பெற்றுவளம்
தினம்கொழிக்கும் கோவைநகர்
ஊரதிகம் பொற்றவளர்
உத்தமனும் சுந்தரற்குப்
பாரதிதன் பதம்பணிந்து
பல்லாண்டு கூறுதுமே!

59 பரீதாபி

செந்தமிழை வளர்க்கின்ற
சீர்க்கம்பன் கழகத்தார்
சிந்தைகளி கொள இந்நாள்
சிறந்தமணி விழாமகிழும்
சுந்தரனார் வளம்செழிக்கச்
சுற்றமுடன் வாழ்கஎனப்
பைந்தமிழ்த்தாய் அடிபோற்றிப்
பல்லாண்டு கூறுதுமே!

60 பிரமாதீச

நற்றவனே! கம்பனெந்தாய்!
நால்வேதம் உபநிடதம்
கற்றவனே! கலையனைத்தும்
கணித்தறிந்தாய்! நினக்குமிக
உற்றவனும் சுந்தரற்கு
உன்னுடைய திருவடியே
பற்றிநின்று நாள்நாளும்
பல்லாண்டு கூறுதுமே!

61 ஆனந்த

வில்லாண்ட சிராமன்
மிகக்காக்க, சுந்தரத்தை,
பல்லாண்டு வாழ்கஎன,
பல்லாண்டு வளர்கஎன,
பல்லாண்டு மகிழ்கஎன,
பல்லாண்டு பொலிகஎன,
சொல்லாண்ட கம்பனடி
தொழுதேத்தி வாழ்த்துகிறோம்.

# வைதிக நெறியில்

## மணிவிழா



கம்பன் அடிப்பொடி

அறுபதாண்டு நிறைந்து அடுத்துவரும் முதல் நாளே அறுபதாண்டு நிறைவு விழா என்றும், ஷஷ்டியப்த பூர்த்திச் சாந்தி என்றும் சொல்லப்பெறும் மணிவிழா ஆகும்.

நம்முடைய பேரன்புக்கும், பெரு மதிப்பிற்கும் உரிய சகோதரர் ஜி. கே. சுந்தரம் அவர்களின் மணிவிழாவை வைதிக நெறியில் நடத்தும் பொறுப்பை நண்பர்களின் உதவியால் நான் ஏற்றுக் கொண்டேன். இறைவன் அருளாலும், அன்பர்களின் துணையாலும் எல்லா வகையாலும் மங்கலமாக நிறைவேறிற்று. 13-10-74, 14-10-74 ஆகிய இரு நாட்களிலும் நிகழ்ந்த வைதிக நிகழ்ச்சிகளைக் கண்களிக்கக் கண்ட பல அன்பர்களின் விருப்பத்திற்கேற்ப அமைப்பு முறைகளையும், நிகழ்ச்சி முறையினையும் விழா அரங்கில் எடுத்துரைத்தேன். அதை எழுத்தில் தந்தால் பயன் மிகும் என அன்பர்கள் மேலும் தூண்டியதால் அதனை மீண்டும் இங்கு தருகிறேன்.

காலத்தை நம்மவர் மிகத் துல்லியமாகக் கணித்து வந்திருக்கின்றனர். நொடி, விநாடி, நாழிகை, யாமம், பொழுது, நாள், வாரம், பக்கம், மாதம், இருது, அயனம், ஆண்டு என்று பகுத்துக் கணக்கிடுதல் நமது முறை. இம் முறை பல நூற்றாண்டுகளாக நடைமுறையில் தொடர்ந்து இருந்து வருகிறது.

இக் கணிப்பு முறை சூரியன், சந்திரன் இயக்கத்தை அடிப்படையாகக் கொண்டு விஞ்ஞான நெறியில் நிர்ணயிக்கப் பெற்றது. இம் முறையே சில நூற்றாண்டுக்கு முன்வரை அகில உலகமும் ஏற்றுப் போற்றிவரப் பெற்றதாகும். ஆண்டுக்குச் சூரியன்; மாதத்திற்குச் சந்திரன்; வாரத்திற்குச் சூரியன் முதல் சனி வரையுள்ள ஏழு கிரகங்கள்; அதி தேவதைகள்.

உலகம் 360 பாகை (Degree) களாக வகுக்கப் பெற்றுள்ளது. சூரியன் இந்த 360 பாகைகளையும் முழுக்க ஒரு சுற்றுச் சுற்றும் கால அளவை ஒரு வருடமாகக் கொள்வோம். 360 பாகைகளையும் பன்னிரண்டு ராசி வீடுகள் (sign of the zodiac) என வகுத்து ஒவ்வொரு ராசி வீட்டிற்கும் 30 பாகைகளாகக் கணக்கிட்டுள்ளனர்.

அப்படிக் கணக்கிட்ட அந்தக் காலத்தில் ஆண்டிற்கு 360 நாட்களாகவே அமைந்தன. இது பல்லாயிரம் அண்டுகட்கு முன் ஏற்பட்ட கணிப்பு. பூமியின் கோள்வழி (orbit) சிறிது சிறிதாக மாறிக்கொண்டு வருகிறது. அதாவது பூமியானது ஆண்டு ஒன்றுக்கு 11 இஞ்சு

விதம் கோள்வழியை விட்டு விலகிக் கொண்டிருக்கிறது. அதனால் ஆண்டு ஒன்றுக்கு 360 நாட்களாக இருந்த நிலை சிறிது சிறிதாக மாற்றம் பெற்றுத் தற்பொழுது ஆண்டு ஒன்றுக்கு 365 நாள், 6 மணி, 13 நிமிடம், 53 விநாடியாகக் கூடியிருக்கிறது.

எனவே ஆதி காலத்தில் 60 ஆண்டுக்கு (60x360) 21,600 நாட்களாக இருந்த நிலை மாறி, தற்காலத்தில் (60x365¼) 21,915 நாட்களாகி விட்டன. முந்திய கணக்குப்படி பார்த்தால் 60 ஆண்டும், 10 மாதமும், 15 நாளும் ஆகின்றன. ஆதலால், ராசி வீடுகளில் கிரகங்கள் அமையும் கால அளவுகளிலும் ஏற்றத் தாழ்வுகள் ஏற்படுகின்றன. என்றாலும் பெருத்த மாற்றம் ஏற்பட்டு விடவில்லை.

குத்து மதிப்பாகப் பார்க்கும் பொழுது பன்னிரண்டு ராசி வீடுகளிலும் — அதாவது, 360 பாகைகளிலும் — தங்கியிருந்து ஒரு முழு வட்டம் சுற்றுவதற்கு,

சூரியனுக்கு ஓர் ஆண்டும், சந்திரனுக்கு ஒரு மாதமும்,

செவ்வாய்க்கு ஒன்றரை ஆண்டுகளும், புதனுக்கு ஓராண்டும்,

வியாழனுக்கு பன்னிரண்டு ஆண்டுகளும், வெள்ளிக்கு ஓராண்டும்,

சனிக்கு முப்பது ஆண்டுகளும், ராகு கேதுகளுக்கு ஒன்றரை ஆண்டுகளும்

ஆகின்றன.

இந்த முறையில் நோக்கும்போது ஆதி நாட்களில் ஒருவர் பிறந்த காலத்தில் அமைந்த ஆண்டு, மாதம், நட்சத்திரம், கிரக நிலை யாவும் அறுபது ஆண்டு நிறைந்த மறு நாளில் அப்படியே அமைந்திருக்கும். ஆனால் பூமியின் கோள்வழியில் மாற்றம் ஏற்பட்டுள்ள இந்நாட்களிலும் ஆண்டு, மாதம், நட்சத்திரம், பெரும்பாலான கிரகங்களின் நிலை யாவும் பிறந்த நாளில் அமைந்ததைப் போலவே இருக்கக் காண்போம்.

ஆதலால் ஏனைய பிறந்த நாட்களைவிட அறுபதாவதாண்டு நிறைந்து அடுத்து வரும் பிறந்த நாளே சிறப்புடையதாகும். எனவே இதனைச் சிறப்பாகக் கொண்டாடுவது நமது மரபு. தெய்வ நம்பிக்கையுடன் அறவோர் வகுத்த, நூல் விதித்த, சிஷ்டாசாரம் என்னும் முந்தையோர் வழிமுறையைப் பின்பற்றி ஷஷ்டியப்த பூர்த்திச் சாந்திக் கல்யாணம் என்னும் அறுபதாண்டு நிறைவு மணிவிழாவைக் கொண்டாடி வருகிறோம். இவ்வாறு கொண்டாடுவதிலும், முறைகள் வேறுபடுகின்றன. ஆம்; நோக்கத்தில் மாறுபாடு இல்லை. ஆனால் செயல் முறையில் வேறுபாடுகள் உள்ளன. குறிப்பாக, வைதிகமுறை என்றும், ஆகம முறை என்றும், இருபெரும் பிரிவுகள் உள்ளன. சைவர், வைணவர்கட்கு ஆகம முறையே ஏற்றது.

அதிலும் சிவன், விஷ்ணு ஆகிய இருபெரும் கடவுளையும் நேர்ந்துகொண்டு கால காலனாகிய அமிருமிருத்யுஞ்ஜெச்வரனை வழிபட்டு ஹோமங்கள் செய்யும் ஆகம முறையே சாலச் சிறந்தது என்பது என் கருத்து. இந்த முறையில் 11 பகுதிகள் உண்டு. அவை முறையே, 1) மகாசங்கல்பம், 2) அனுக்ஞை, 3) விக்னேச்வர பூஜை, 4) கணபதி ஹோமம், 5) நவக்கிரக ஹோமம், 6) நாந்தி சோபனம், 7) லட்சுமி பூஜை, 8) மிருத்தியுஞ்ஜெய ஹோமம், 9) மந்திர தீர்த்த அபிஷேகம், 10) தம்பதி பூஜை, 11) திருமாங்கல்ய தாரணம் என்பவையே.

இந்த ஆகம முறைப்படி மூன்று வேதிகைகள் அமைத்து மூன்றிலும் மொத்தம் 28 குடங்களில் திருமஞ்சன தீர்த்தம் நிரப்பி முறைப்படி வேதிகைகளில் அலங்காரம் செய்து தான்யங்கள் பரப்பிக் கும்பஸ்தாபனம் செய்யப்பெறும். கங்கை முதலான புண்ணிய நதிகளின் தீர்த்தமும், திருமஞ்சன திரவியங்களும் கலந்து திருமஞ்சன தீர்த்தம் தயாரிக்க வேண்டும். மூன்று வேதிகைகளும் தெற்கு வடக்கான நேர் வரிசையில் கிழக்கு நோக்கியதாய் அமைக்கப்பெறும்.

(1) தெற்குப் பக்க வேதிகையில் 11 குடங்கள் இருக்கும். சூரியன் முதலான ஒன்பது கிரகங்கட்கு 9ம், ராசிதேவதைக்கு 1-ம், காலாதி தேவதைக்கு 1ம் ஆக 11 குடங்கள்.

(2) பிரதானம் அல்லது நடு வேதிகையில் 15 குடங்கள் இருக்கும். அம்ருத மிருத்யுஞ் ஜெயேச்வரர்க்கு 1 குடம்; அம்ருத மிருத்யுஞ்ஜெயேச்வரிக்கு 1 குடம்; மார்க்கண்டே யருக்கு 1 குடம்; கணபதிக்கு 1 குடம்; இந்திராதி அஷ்டதிக் பாலர்க்கு 8 குடம்; துர்க்கைக்கு 1 குடம்; நந்திக்கு 1 குடம்; பைரவருக்கு 1 குடம் ஆக 15 குடங்கள்.

(3) வடக்குப் பக்க வேதிகையில் 2 குடங்கள். பிரபவ முதல் அட்சய வரையுள்ள அறுபது ஆண்டுகளான ஷஷ்டிதேவிக்கு 1 குடம்; கச்யபர், அஸ்வத்தாமா, அத்திரி, மகாபலி, பரத்வாசர், வியாசர், விச்வாமித்திரர், அனுமார், கௌதமர், விபீஷணர், ஜமதக்கினி, கிருபாச்சாரி, வசிஷ்டர், அருந்ததி, பரசுராமர், திஷணு, விருத்தமாதா, கௌரி, சரசுவதி, தனலட்சுமி, தானியலட்சுமி, சந்தானலட்சுமி, சௌபாக்யலட்சுமி, தைரியலட்சுமி, வித்தியாலட்சுமி, வீரலட்சுமி, விஜயலட்சுமி, ஆகிய 27 பெய ருக்கும், அஸ்வதி முதல் ரேவதி வரையுள்ள 27 நட்சத்திரங்களுக்கும் 1 குடம், ஆக 2 குடங்கள்.

இனி இந்த மணிவிழாப் பூஜா காலங்களில் நடைபெற வேண்டிய பாராயணங் களைக் காண்போம்.

கணபதி வழிபாடாக: (1) மகா கணபதி பஞ்சகம்; (2) கணபதி உபநிஷதம்; (3) கணபதி சகஸ்திரநாமம்; (4) கணபதி ஸ்தோத்திரங்கள்;

சிவ வழிபாடாக: (1) இந்திராக்ஷி-சிவகவசம்; (2) மிருத்யுஞ்ஜெய ஸ்தோத்திரங்கள்;

விஷ்ணு வழிபாடாக: (1) மகாவிஷ்ணு சகஸ்திரநாமம்; (2) வேங்கடேச அஷ்டோத்திரம்;

லட்சுமி வழிபாடாக: (1) மகாலட்சுமி அஷ்டோத்திரம்; (2) மகாலட்சுமி ஸ்தோத் திரங்கள்;

உமை வழிபாடாக: (1) லலிதா சகஸ்திரநாமம்; (2) பார்வதி ஸ்தோத்திரங்கள்;

சரஸ்வதி வழிபாடாக: (1) சாரதா அஷ்டோத்திரம்; (2) சரஸ்வதி ஸ்தோத்திரங்கள்;

மார்க்கண்டேய வழிபாடாக: மார்க்கண்டேய ஸ்தோத்திரங்கள்;

நவக்கிரக வழிபாடாக: நவக்கிரக ஸ்தோத்திரங்கள்;

மேலும், நாமத்ரய ஸ்தோத்திரங்கள் அன்றியும்

1) சதுர்வேத பாராயணம்

2) ஆகம பாராயணம்

3) தேவாராதி திருமுறைப் பாராயணம்

4) நாலாயிரத் திவ்யப் பிரபந்தப் பாராயணம்

முதலியவை இரு நாட்களிலும் தொடர்ந்து முறைப்படி நடைபெறும்.

இங்ஙனம் நிகழும் இந்த மங்கல நிகழ்ச்சியின் நடைமுறை வரிசையை இனிக் காணலாம்.

முந்திய நாள் காலையில்

6—30 ஸ்நான சங்கல்பம்,
தம்பதி ஸ்நானம்.
7—30 விநாயகர் வழிபாடு, (விநாயகர் கோயிலில்)
மகாசங்கல்பம்,
அனுக்ஞை.
8—30 கணபதி ஹோமம்,
நவக்கிரக ஹோமம்,
நாந்தி சோபனம்.

12—30 காலை நிகழ்ச்சிகள் நிறைவு.

முந்திய நாள் மாலையில்

6—10 லட்சுமி பூஜை,
ஆசார்ய வர்ணம்,
யாக பூஜை தொடக்கம்.
9—00 பூர்ணாகுதி,
சோடசோபசார தீபாராதனை,
மாலை நிகழ்ச்சிகள் நிறைவு.

மணிவிழா நாளில் காலை:

6—30 யாக பூஜை தொடக்கம்,
11—00 மகா பூர்ணாகுதி,
சோடசோபசார தீபாராதனை,
யாக பூஜை நிறைவு.
12—00 மந்திர கலசாபிஷேகம்,
12—30 மூத்தோர் பெரியோரிடம் ஆசி பெறல்,
இளையோர்க்கு ஆசி வழங்கல்,
தேவாலய தரிசனம்.

இவ்வண்ணம் கொண்டாடுவதால் இறைவன் அருளும், பெரியோர் ஆசியும், மனச் சாந்தியும், பந்து மித்திரர்கள் இணக்கமும் நிரம்பி உள்ளத்தில் புதிய உணர்ச்சியும், உடம்பில் புதிய தெம்பும் வளரும். தத்துவ நெறியாலும், விஞ்ஞான அடிப்படையாலும், சமுதாயக் கண்ணோட்டத்தாலும் இவ் விழா பொருள் நிரம்பிய ஒன்றாகும்.

ஆறுபத்து ஆண்டை
அடைந்துவளர் ஜி. கே. எஸ்.
பேறுபத்தோடு ஆறும் நனி
பெற்று ஆயுள் – நூறுமுற்றி,
கன்னித் தமிழ்மொழிபோல்,
கம்பன் கவிவளம்போல்
மன்னிப் பொலிக மகிழ்ந்து.

என்று மணிவிழாச் செல்வர் ஜி. கே. சுந்தரம் அவர்களை மனமார, வாய் மணக்க வாழ்த்தி மகிழ்வோமாக!

○

# ஜி. கே. எஸ்.

★ உறுதியானவர்
★ விநோதமானவர்
★ தேசபக்தர்
★ விளையாட்டு வீரர்
★ இலட்சியவாதி

'கல்கி'யில் "தலைவர் தரிசனம்" என்ற தலைப்பில் வந்த 9-வது கட்டுரை இது.

சொல்லியவர் : ஸ்ரீ வி. எஸ். ஸ்ரீகுமார் • கேட்டு எழுதியவர் : கோமதிஸ்வாமிநாதன்

பல்லடத்தில் ஒரு நவீன நூற்புத் தொழிற்சாலை. ஒரு சிறு தகராறைக் காரணமாகக்கொண்டு அந்தக் கட்டிடத்தின் கண்ணாடி ஜன்னல்கள் நொறுக்கப்பட்டன. கல் வீசியவர் தம் தவற்றை உணர்ந்து மன்னிப்புக் கேட்க முன்வந்தால் விவகாரத்தை அத்துடன் முடித்துவிடுவதாக நிர்வாகம் அறிவித்தது. ஆனால் தவறு செய்தவருக்கு தைரியக் குறைச்சல். சும்மா இருந்துவிட்டார்.

விளைவு: தொழிற்சாலை மூடப்பட்டது. உற்பத்திக் குறைவினால் வியாபார நஷ்டம் ஏற்படும் என்பதும், தொழிலாளர்கள் பட்டினி கிடைக்க நேரிடும் என்பதும் தொழிற்சாலை நடத்துபவர்களுக்குத் தெரியாத விஷயமில்லை. ஆனாலும் அவர்கள் தொழிலாளர்கள் தங்கள் கடமை உணர்ச்சிக்கும் கட்டுப்பாட்டு உணர்ச்சிக்கும் அதிக முக்கியத்துவம் கொடுப்பவர்களாக இருக்க வேண்டும் என்று விரும்பினார்கள்.

சில தினங்களில், தவறு செய்த தொழிலாளி தன் மன உறுத்தலைத் தாங்காமல், தன் குற்றத்தை ஒப்புக்கொள்ள முன்வந்தான். தான் குடிபோதையில் கற்களை வீசியதாக ஒப்புக் கொண்டான். அந்தத் தொழிற்சாலையின் கதவுகள் மீண்டும் திறக்கப்பட்டன.

நூற்பாலையின் அதிபர் அந்தக் குற்றவாளிக்கு அளித்த தண்டனை விநோதமானது. "நீ இன்றிலிருந்து பத்து நாட்கள் தக்க துணையுடன் கள்ளுக்கடைக்குப் போய் அங்கே உட்கார்ந்திருக்க வேண்டும். ஆனால் குடிக்காமல் வீடு திரும்ப வேண்டும்" என்பதுதான் அந்த மில் அதிபர் விதித்த தண்டனை! அந்த மில் அதிபர்தான் திரு. ஜி. கே. சுந்தரம்.

மனிதன் சபலத்துக்கு அடிமையாகக் கூடாதென்பதற்காக மனத்தத்துவ ரீதியில் அவர் அந்தத் தண்டனையை விதித்து, அந்தத் தொழிலாளிக்கு மறுவாழ்வு கொடுத்ததோடல்லாமல், அவன் குடும்பத்தில் தமக்குள்ள அக்கறையையும் வெளிப்படுத்தினார்.

'மனிதன் இயற்கையிலேயே கெட்டவன் இல்லை. சந்தர்ப்பங்களினால் கெட்டவனாகிறான்' என்ற வாதத்தில் தீவிர நம்பிக்கை உள்ளவர் இவர். தமக்குச் சொந்தமான பல ஸ்தாபனங்களில் பணிபுரியும் எவரையும் வேலையிலிருந்து நீக்கியதில்லை. தவறு செய்தவர்கள் நிச்சயம் அதை உணர்ந்து திருந்துவார்கள் என்ற நம்பிக்கைதான் காரணம்.

ஊழியர்கள் தெரிந்தோ தெரியாமலோ செய்யும் தவறுகளுக்கு எஜமானர்கள் பொறுப்பில்லை என்று ஒதுங்கும் சுபாவம் இவரிடம் கிடையாது. இரண்டாம் உலகப்போர் நடந்த வேளையில் நூல் விநியோகத்துக்கு ஏகப்பட்ட கட்டுப்பாடுகள். கோவை லக்ஷ்மி மில்லில் பணியாற்றிய குமாஸ்தா ஒரு சிறு தவற்றுக்குக் காரணமாக இருந்து விட்டார். அரசாங்கம் வழக்குத் தொடர ஏற்பாடு செய்துவிட்டது. கலெக்டரைக் கண்டு பேசிச் சமரசம் செய்து வழக்கைத் தவிர்க்கும்படி சுந்தரத்திடம் நண்பர்கள் யோசனை சொன்னார்கள். சுந்தரம் மறுத்து விட்டார், வழக்கு நடந்து அதன் தீர்ப்புக்கும் கட்டுப்பட்டார்!

சுந்தரம் அவர்களின் குடும்பம் தேசியப்பற்று மிகுந்த குடும்பம். இவர் தந்தை குப்புசாமி நாயுடு அவர்கள் சிறந்த தேசபக்தர். 1930-ம் ஆண்டில் காந்திஜி உப்பு சத்தியாக்கிரக இயக்கத்தைத் தொடங்கியபோது, தமிழ் நாட்டில் குப்புசாமி நாயுடு அவர்களும் அந்த இயக்கத்தில் பங்குகொள்ள விரும்பினார். ஆனால் குடும்பத்தினர் அந்த நாளைய பிரிட்டிஷ் அரசாங்க அடக்குமுறைகளுக்கு அந்த முதியவர் ஆளாவதை விரும்பவில்லை. ஆனால், பெரியவரோ தம் குடும்பத்தில்

ஒருவராவது அந்த இயக்கத்தில் பங்கு கொள்ள வேண்டுமென்று விரும்பினர். பதினறே வயதுடைய அவருடைய குமாரர் தந்தையின் விருப்பத்தைப் பூர்த்தி செய்ய முன்வந்தார். உப்புச் சத்தியாக்கிரகம் சுந்தரத்துக்கு ஆறுமாத சிறைத் தண்டனையை வாங்கிக் கொடுத்தது. அவருடைய படிப்பு தடைப்பட்டது.

காந்தி இர்வின் ஒப்பந்தம் ஏற்பட்டதைத் தொடர்ந்து சுந்தரம் தம் மேற்படிப்புக்கு இங்கிலாந்துக்குச் சென்ருர். நான்கைந்து ஆண்டுகள் அங்கே தங்கி நெசவுத் தொழில் நுணுக்கங்களைக் கற்றுத் திரும்பினர். குடும்ப நிறுவனமாகிய லட்சுமி மில்லில் பங்குதாரராகவும், மானேஜராகவும், பணியாற்ற ஆரம்பித்தார்.

தொழில் நிர்வாகத்தில் அக்கறை காட்ட ஆரம்பித்திருந்த நேரத்தில் காங்கிரஸ் ஸ்தாபனம் அவரைப் பாராளுமன்ற உருப்பினராகத் தேர்ந்தெடுக்க விரும்பியது. ஆனல் அவர் அதில் ஆர்வம்காட்டவில்லை. தம்மை அரசியலில் ஈடுபடுத்திக் கொள்ளவும் விரும்பவில்லை.

ஆனல் 1959-ம் ஆண்டில் ராஜாஜி அவர்கள் 'சுதந்திரா'க் கட்சியைத் தொடங்கிவிட்டார் என்ற செய்தியை சுந்தரம் வெளிநாடுகளில் சுற்றுப் பயணம் செய்து கொண்டிருக்கையில் கேள்விப்பட்டார். உடனே ஒரு நண்பர் மூலம் தாம் சுதந்திராக் கட்சியில் சேர்ந்துவிட்டதாக ராஜாஜி அவர்களுக்குச் செய்தி அனுப்பினர்.

ராஜாஜி அவர்களிடம் சுந்தரத்துக்கு அபரிமிதமான பக்தி. ராஜாஜியின் மறைவுக்குப் பிறகு கட்சி தொடர்ந்து இயங்குமா என்று பலருக்கு ஐயப்பாடு எழுந்தபோது, சுந்தரம் உறுதியுடன் அந்தக் கட்சியைத் தொடர்ந்து நிலைநிறுத்தப் பொறுப்பேற்றுக் கொண்டார்.

ராஜாஜி அவர்கள் ஞாபகார்த்தமாகச் சில நல்ல திட்டங்களை நிறைவேற்றச் சமீபத்தில் நடந்த சுந்தரம் அவர்களின் அறுபதாவது பிறந்தநாளை ஒட்டி ஒரு குழுவே உருவாயிற்று.

காஞ்சிப்பெரியவரிடம் சுந்தரத்துக்கு ஈடுபாடு அதிகம். சமீபத்தில் ஆசாரிய சுவாமிகளைச் சந்தித்தபோது அவருடைய விருப்பத்தைச் சுந்தரத்தால் ஊகிக்க முடிந்தது. அதன் விளைவாகச் சென்னை அடையாற்றில் உருவாகிக் கொண்டு வரும் மகாலட்சுமி ஆலயத்துக்குச் சுந்தரம் குடும்பத்தினர் பெரும் செலவில் மூலஸ்தானத்தையே நிர்மாணித்துக் கொடுக்கவிருக்கிருர்கள்.

சமூக சேவையிலும் சுந்தரம் சளைத்தவர் இல்லை. தந்தையார் குப்புசாமி நாயுடு அவர்கள் ஞாபகார்த்தமாகக் கோவையில் ஒரு முதல்தரமான ஆஸ்பத்திரியை நிர்மாணித்து அது தரமான முறையில் நடக்க ஏற்பாடு செய்திருக்கிருர். அடிக்கடி ஆஸ்பத்திரிக்குப் போய் நோயாளிகளைச் சந்தித்து உடல் நலம் விசாரிப்பார். சில பள்ளிக்கூடங்களும் இவரால் தோற்றுவிக்கப்பட்டிருக்கின்றன.

1962-ம் ஆண்டு தேர்தலில் சுந்தரம் சுதந்திரா கட்சியின் சார்பில் பாராளுமன்றத்துக்கு வேட்பாளராக நின்ருர். தேர்தல் காலத்தில் ஓட்டுக்களை எப்படியெல்லாம் சேகரிக்க வேண்டும் என்று நண்பர்கள் அவருக்கு எத்தனையோ யோசனைகள் சொன்னர்கள். ஹூஹூம்! மனச்சாட்சிக்கு விரோதமாக அவர் நடந்துகொள்ளத் தயாராக இல்லை. விளைவு! தேர்தலில் தோல்வி. அதை அவர் பொருட்படுத்தவும் இல்லை.

ஆனல் 1964ல் ராஜ்யசபைத் தேர்தலுக்கு நின்று வெற்றி பெற்ருர். சுபாவத்தில் அதிகம் பேச மாட்டார். அப்படிப் பேசினலும் ஆராய்ந்துதான் பேசுவார். சொல்வதை நிதானமாகத் தாழ்ந்த குரலில்தான் சொல்லுவார். ஆயிரக்கணக்கான தொழிலாளர்கள் மத்தியில் 'சுந்தர நாயக்கர்' என்ருல் அலாதி அன்பு உணர்ச்சி பொங்கி எழுவதைக் காணலாம். அதே சமயத்தில் அவர்களிடம் வேலை வாங்குவதிலும் கண்டிப்பானவர்.

தமிழ் இலக்கியத்தில் நிறைய ஆர்வம் காட்டுவார். கோவை கம்பன் கழகத்தின் தலைவர். காரைக்குடி கம்பன் நிறுவனத்திலும் பொறுப்பு உண்டு. கோவை, பாரதிய வித்யாபவனத்தின் கிளைக்கும் இவர்தான் தலைவர்.

விளையாட்டுக்களிலும் இவர் அக்கறை காட்டுவார். ஹாக்கி, டேபிள் டென்னிஸ் போன்ற ஆட்டங்கள் இவருக்குப் பிடித்தமானவை.

சகோதரர்களிடையே பாகப் பிரிவினையான குடும்பந்தான். ஆனாலும் பரஸ்பரம் ஒவ்வொருவருடைய அபிப்பிராயத்தைக் கேட்டு மதித்து நடக்கும் பண்பு பெற்றவர்கள். எல்லாவற்றிலுமே கூட்டுக் குடும்பம்போலத்தான் இணைந்து செயலாற்றுவார்கள்.

சுந்தரம் அவர்களிடம் மிகவும் அபிமானம் கொண்டிருந்த நெருங்கிய உறவினர் ஒருவர் காலமானபோது தம்முடைய ஏராளமான ஆஸ்திகளை சுந்தரம் அவர்களுக்கே உயில் எழுதி வைத்திருப்பது தெரிய வந்தது. இவ்விஷயம் சுந்தரத்துக்கே மிகுந்த ஆச்சரியமாக இருந்தது.

தம் சகோதரர்களை அழைத்தார், "இந்தச் சொத்துக்கள் எல்லாம் எனக்கு மாத்திரம்தான் என்று நான் நினைக்கவில்லை. நம் எல்லோருக்கும் சேரவேண்டியது என்றே கருதுகிறேன். ஆகவே நம் குடும்பச் சொத்தைப் பங்கு போட்டதுபோலவே இதையும் செய்ய ஏற்பாடு செய்யுங்கள்" என்று சொல்லிவிட்டார். அப்படியே நடந்தது.

சுந்தரத்தின் நிறுவனங்கள் நாட்டின் தொழில் வளர்ச்சிக்கு நல்ல பணி செய்கின்றன. அன்னியச் செலாவணிக்கு வழி வகுக்கின்றன. இந்த நிறுவனங்களை 'எப்படியாவது' நடத்தலாம் என்ற எண்ணம் இல்லாமல், 'இப்படித்தான்' நடத்தவேண்டும் என்ற லட்சியத்தைக் கடைப்பிடித்துத் தொழில் துறையில் நிமிர்ந்து நிற்பவர் திரு. சுந்தரம். △








CARBORUNDUM
UNIVERSAL LTD.

Manufacturers of

QUALITY BONDED AND COATED ABRASIVES,
ABRASIVE GRAINS, CALCINED BAUXITE
AND SUPER REFRACTORIES.

Madras • Bombay • Calcutta • New Delhi

# ஆழ்ந்து அகன்ற நுண்ணியன்



அமரர் ராஜாஜி அவர்களின் 93-ஆம் ஆண்டு பிறந்த நாள் விழா மலரில் வெளியான மணி விழாச் செல்வர் திரு. ஜி. கே. எஸ். அவர்களின் கட்டுரை.

**ராஜாஜி** அவர்களின் பிறந்த நாள் நினைவாக வெளியிடும் இம்மலரில், இந்தக் கட்டுரையை எழுதுவதில் நான் பெரிதும் மகிழ்ச்சி அடைகிறேன்.

**ராஜாஜி** அவர்கள் 93 ஆண்டு அடைந்திருக்கிறார்கள் என்பதைக் கேட்டு மிகவும் சந்தோஷம் அடைகிறேன். அவரைப்பற்றி நினைக்கும்போது, அவர் முதன் மந்திரியாகப் பதவி ஏற்ற சமயம் நான் அவரை முதன்முதலாக சந்தித்த பொழுது நடைபெற்ற ஒரு நிகழ்ச்சி எனக்கு ஞாபகத்திற்கு வருகிறது.

1936-ம் ஆண்டிலே அவர் முதன் மந்திரியாகப் பதவி ஏற்றிருந்தபொழுது, மில் அதிபர்களின் சார்பாக அவரைக் கோவைக்கு அழைத்திருந்தோம். அப்போது தொழில் தகராறுகள் அதிகமாக இருந்ததின் காரணமாக, மில்களில் வேலை சரிவர நடக்காமல் இருந்தது. அப்போது **N. G. ராமசாமி** அவர்கள் காங்கிரஸின் தொழிற் சங்கத் தலைவராக இருந்தார். நான் மில் அதிபர்களின் சங்கத்திற்குக் காரியதரிசியாக இருந்தேன். ஆகையால் முதன் மந்திரி அவர்களை சந்திக்கவேண்டும் என்று அழைப்பு கொடுத்திருந்தோம். அதற்கு இணங்க அவர் கோவைக்கு விஜயம் செய்தார்.

கோவையில் லக்ஷ்மி மில்ஸ் காரியாலயத்தில் கூட்டத்தைக் கூட்டியிருந்தோம். **ராஜாஜி** அவர்கள் வந்து அமர்ந்ததுமே, மில் அதிபர்கள் எல்லோரும் கூட்டத்தில் வந்து அமர்ந்தார்கள். **ராஜாஜி** அவர்கள் மில் அதிபர்களின் தலைவர் திரு **R. வெங்கிடுசாமி நாயுடு** அவர்கள் விஷயங்களை எடுத்துப் பேசுவார் என்று ஒரு சில விநாடிகள் பொருத்திருந்தார். 2 நிமிடம், 3 நிமிடம், 5 நிமிடங்கள் ஆகியும்கூட ஒருவரும் விஷயத்தை எடுத்துப் பேசவில்லை. அதற்குப் பிற்பாடு ராஜாஜி அவர்களே பேச ஆரம்பித்தார். "இந்தக் காரியாலயம் ஏர் கண்டிசன் செய்யப்பட்டிருக்கிறதா? நன்ருக இருக்கிறது" என்று சொன்னர். மறுபடியும் தாமதித்துப் பார்த்தார். விஷயம் ஒன்றும் வெளிவரவில்லை. இவரும் இவராக எதைப்பற்றியும் எடுத்துப் பேசத் தயாராக இல்லை. ஒருசில விநாடிகள் இருந்த பிற்பாடு எல்லோரையும் பார்த்து, நமஸ்கரித்துவிட்டு "போய் வருகிறேன்" என்று சொல்லிவிட்டுப் புறப்பட்டுவிட்டார். வெளியில் போகும்போது அங்கு சுவரிலே மாட்டப்பட்டிருந்த திரு. **G. குப்புசாமி நாயுடு** அவர்களின் படத்தைப் பார்த்து " இது யார்" என்று கேட்டார். "இது எங்களுடைய தகப்பனர். காலஞ்சென்ற திரு. **G. குப்புசாமி நாயுடு** அவர்கள்; இந்தக் கம்பெனியினுடைய ஸ்தாபகர்" என்று சொன்னேன்; அதற்கு அவர் "எல்லாம் தற்குறிகள்" என்று சொன்னர். இப்படிச் சொல்லிவிட்டுப் புறப்பட்டுச் சென்றுவிட்டார். எந்த விதமான விஷயத்தைக் குறித்தோ, அல்லது தொழில் தகராறுகளைப் பற்றியோ ஒன்றும் பேசவில்லை. அவர் சென்ற பிற்பாடு மில் அதிபர்கள் எல்லாம் அவரின்பேரில் ஒரே குறையாக இப்படி

மில்லின் ஸ்தாபகரை "தற்குறி" என்று சொல்லிவிட்டுப் போய்விட்டாரே, இவருக்கு மிகவும் கர்வம்; பெரியவர்களை மரியாதையாகப் பேசவும்கூடத் தெரியவில்லை; பதவி வந்தாலே கர்வமும் கூடவே வந்துவிடுகிறது என்று இவ்வாறாகச் சிலர் பேச ஆரம்பித்து விட்டார்கள். அந்த சந்தர்ப்பத்திலே அவர்களுக்கு விளக்கம் சொல்லி ஆறுதல் கூற நான் தயாராக இல்லை. ஏனென்றால் அவ்வளவு பேரும் அவர் சொன்னது தவறு என்ற மனப்பான்மையிலேயே இருந்தார்கள். ஆகையால் எவ்வளவு எடுத்துச் சொன்னாலும் அவருடைய கருத்தை அந்தக் கூட்டத்தினர் புரிந்துகொள்ள மாட்டார்கள் என்பதற்காக நான் ஒன்றும் கூறாமல் இருந்துவிட்டேன். அதற்குப் பிறகு சாவகாசமாக பல இதர சந்தர்ப்பங்களில் அன்று வந்திருந்தவர்களிடத்தில் ராஜாஜி அவர்கள் கூறிய வார்த்தைக்கு விளக்கம் கூறினேன். "அவர் "தற்குறி" என்று சொன்னதின் பொருள் உங்களுக்கு விளங்கவில்லை. அதாவது இப்பேர்ப்பட்ட பெரியவர்கள் அதிகப் படிப்பு இல்லாமல் இருந்தும் கூட தொழில்களை ஸ்தாபித்து அதைத் திறம்பட நடத்தி வந்தார்கள். ஆனால் இப்பொழுது படித்துவிட்டு வந்த இளைஞர்கள் அதிகாரத்தில் இருந்தும்கூட அவர்களிடம் தொழிலை நடத்தக்கூடிய திறமை இல்லை; சக்தியில்லை என்று இதை குறிப்பிட்டுத்தான் "தற்குறிகள்" மில்லை ஸ்தாபித்து நடத்திவந்தார்கள் என்னும் பொருள்படக் கூறியிருக்கிறார்" என்று சொன்னேன். "இதை அவர் என்ன அர்த்தத்தில் சொன்னார் என்று புரிந்துகொள்ள சாமர்த்தியம் வேண்டும். அந்த சாமர்த்தியமும், திறமையும் நமக்கு இல்லாது போனதினால்தான், நாம் அவரை எதற்காகக் கோவைக்கு அழைத்தோமோ அதைக் கூறவில்லை. ஆனால் அதைக் கூறத் தவறியதின் காரணமாகத்தான் அவர் தற்காலத்து இளைஞர்களைவிடத் தற்குறிகள் மிகவும் சாமர்த்தியமும், திறமையும் கொண்டு தொழில்களை ஸ்தாபித்திருக்கிறார்கள் என்ற கருத்தில் பெரியவர்களை உயர்த்திப் பேசினாரேயன்றிக் குறைத்துப் பேசவில்லை" என்று நான் விளக்கம் கூறினேன்.

இம்மாதிரி ராஜாஜி அவர்கள் சொல்லும் விஷயங்கள் மிகவும் ஆழ்ந்த கருத்துள்ளவையாகவும், பொருள் செறிந்தும் விளங்கும். கேட்பவர்கள் அதைச் சரிவர உணரவில்லை என்றால் அவருடைய வார்த்தைகள் முழுவதும் விளக்கமாகாது. இதன் காரணமாகத்தான் பல தடவைகளில், பல சந்தர்ப்பங்களில் தப்பான அர்த்தங்களைச் செய்துகொண்டு அவரைத் தப்பாகக் கணக்கிடுகிறார்கள்.

இதன் காரணமாகவே அவர் இத்தேசத்தின் புரிந்துகொள்ள முடியாத மனிதர் என்று கருதப்படுகிறார்.


*With best compliments from*

**K. PONNUSWAMY & CO.**

Amarjothi Buildings

JAWAHAR BAZAR, KARUR-639 001

*Manufacturers of*

**High class Jacquard Bedspreads (art-silk & cotton)**
**Furnishings, Terry Towels etc.**

# வாழ்க

# ஜி. கே. எஸ்.

( ஜி. ஆர். தாமோதரன் )



மக்கள் வளமான வாழ்வு பெறத் துணையாய் இருப்பவை உழவும் தொழிலும் ஆகும். எனவேதான், "உழவுக்கும் தொழிலுக்கும் வந்தனை செய்வோம்" என்று பாரதி பாடினான். இந்த இரண்டினையும் தமிழகத்திற்கு மிகுதியாகத் தந்து வரும் மக்கள் கொங்கு நாட்டு மக்கள் ஆவர். பிற பகுதியில் காணப்படும் வளமான நிலமும் நீரும் கொங்கு நாட்டில் இல்லையென்றாலும் தங்கள் உழைப்பாலும் விஞ்ஞான ரீதியாகப் பயிரிடும் திறத்தாலும் உழவுத் தொழிலில் முன் நின்று தமிழ் நாட்டுக்கு வழி காட்டும் மக்கள் கொங்குநாட்டு மக்களே. தொழில் வளர்ச்சியில் தமிழகம் இன்று பெற்றுள்ள சிறப்பிற்கு வித்திட்ட பெருமையும் கொங்குப் பகுதியையே சாரும். அதிலும் கோவை மாவட்டம் முன்னோடியாக விளங்கும்.

தமிழ்நாட்டின், தொழில் வளர்ச்சிக்கும் விஞ்ஞான ரீதியாக உழவுத் தொழில் வளர்ச்சிக்கும் வித்திட்ட கோவை மாவட்டத்தினைச் சேர்ந்த குடும்பங்களை விரல்விட்டு எண்ணிவிடலாம். இந்தக் குடும்பத்தவர்கள் நேர்முகமாகவும் மறைமுகமாகவும் செய்து வந்த, செய்து வருகின்ற நற்பணிகளின் காரணமாகத்தான் கோவை மாவட்டத்தில் இன்று பதினெட்டுக் கலைக்கல்லூரிகளும், ஐந்து பாலிடெக்னிக்குகளும், மூன்று எஞ்சினீயரிங் கல்லூரிகளும், ஒரு விவசாயப் பல்கலைக் கழகமும் இயங்குகின்றன; பல நூற்பு ஆலைகளும் எஞ்சினீயரிங் தொழிலகங்களும் செயல்படுகின்றன. அத்தகைய குடும்பங்களில் ஒன்று கோவை பாப்பநாய்க்கன்பாளையத்தினைச் சேர்ந்த திரு. ஜி. குப்புசாமி நாயுடு அவர்களின் குடும்பமாகும்.

திரு. ஜி. குப்புசாமி நாயுடு அவர்களின் அரும்பெரும் மக்கள் திருவாளர்கள் ஜி. கே. தேவராஜுலு, ஜி. கே. சுந்தரம், ஜி. கே. இராஜகோபால், அமரர் ஜி. கே. மணி (ஜி. கே. கோவிந்தசாமி) ஆகியோரை தமிழகத்து மக்கள் மட்டுமன்றி பாரத நாட்டுத் தொழில் உலகமும் அரசியல் உலகமும் நன்கு அறியும். திரு. ஜி. கே. தேவராஜுலு அவர்தம் கூர்த்த மதியும் முன்னோக்கி அறியும் திறனும் எல்லாரும் அறிந்தவை. அவர் நல்ல கைராசியும் செயல்திறனும் மிக்க பெரியார்; கடவுள் பக்தியும், பார்ப்பதற்குக் கடுகடுப்பாய்த் தோன்றினாலும் கருணை உள்ளமும் கொண்ட நல்லார். இவர்க்கு வாய்த்த இளவல்கள் இராமனுக்கு வாய்த்த அருந்தம்பியர்களைப் போன்று அண்ணனுக்கு நிழலாய் நின்று எல்லா நிலைகளிலும் ஒத்து உதவி உயர்ந்த நிலைகளை உண்டுபண்ணும் இயல்பினர். அந்த ஒற்றுமையும் உயர்ந்த ஒத்துழைப்பும் விளங்கும் காரணத்தால்தான் சிறிய ஜின்னிங் ஃபாக்டரியைத் தொடங்கிய திரு. ஜி. குப்புசாமி நாயுடு குடும்பத்தவரால் நவீனமயமாக்கப்பட்ட பல பஞ்சாலைகள், பஞ்சாலைக்கான இயந்திரங்களைச் செய்யும் லட்சுமி மெஷின் ஒர்க்ஸ், ரேயான் நூற்பு ஆலை, பள்ளிகள், கல்லூரிகள், தாய் சேய் மருத்துவ மனைகள் ஆகியவைகளைத் தொடங்கியும் ஆண்டவனுக்கான ஆலயங்கள் பல கட்டியும் மக்கட்குத் தொண்டு செய்ய முடிகின்றது. அந்த ஒற்றுமையும் ஒத்துழைப்பும் ஓங்க ஆண்டவன் அருள்புரிவாராக.

இத்தகைய ஒத்துழைப்புக்கு நல்லதொரு ஆணிவேராய் அமைந்து செயல்படு பவர் மணிவிழாச் செல்வர் திருவாளர் ஜி. கே. சுந்தரம் அவர்கள் ஆவார்கள். மணி விழாச் செல்வர் திரு. ஜி. கே. எஸ், அவர்கள் இன்றும் சுறுசுறுப்பும் பொதுப் பணியில் ஆர்வமும் காட்டிவரும் உழைப்பாளர். நண்பர் திரு. ஜி. கே. சுந்தரம் அவர்கள் சிரித்த முகமும் எதனையும் வெளிப்படையாகப் பேசும் இயல்பும் உடையவர்; அரசியல் துறை யில் ஆழ்ந்து சிந்திக்கும் அரும் பண்பினர்; கொண்ட கொள்கையில் உரமான நம்பிக்கை உடைய திறவோர்; நாட்டு விடுதலைக்குப் போராடி சிறை சென்ற நல்லவர்; எளிமை யைத் தழுவி ஏற்கும் இயல்பினர்; தொழில் வளர்ச்சி சீராக வளர்ந்து வளர்ச்சியின் பயன் எல்லார்க்கும் முறையாகக் கிடைக்க வேண்டும், அப்போதுதான் நாடு முன்னே றும் என்ற திறமான கோட்பாடு கொண்ட உரவோர்; மக்கள் நலன் நாடும் நல்லார்; அரசியலில் ஒரு குறிப்பிட்ட கட்சியைச் சார்ந்திருந்தாலும் மற்ற கட்சிக்காரர்களிடம் நட்போடு பழகும் இயல்பினர்; பிறர் கருத்துக்களை மதித்து நல்லனவற்றை ஏற்றுக் கொள்ளும் தன்மையர். திருவாளர் ஜி. கே. டி. அவர்களுக்கு இவர் அளித்த ஊக்கத் தால் மணி உயர்நிலைப் பள்ளியும் மருத்துவ மனையும் கல்லூரியும் தோன்றின என்பதனை இங்கு நினைவு கூர்தல் வேண்டும்.

நண்பர் திரு. ஜி. கே. எஸ். அவர்கள் போல்டன் முனிசிபல் கல்லூரியில் டெக்ஸ் டைல் டெக்னலஜி கல்வி கற்ற காலத்தில் நானும் இங்கிலாந்தில் பொறியியற் கல்வி கற்று வந்தேன். ஒரே ஊர்க்காரர் என்ற முறையிலும் நண்பர்கள் என்ற முறையிலும் அவ்வப்போது சந்திப்பது உண்டு. அப்படிச் சந்திக்கும் போதெல்லாம் ''இத்தகைய கல்வியை நம் நாட்டிலேயே அளிக்கும் காலம் எப்போது வரும்! நம் நாடு ஆங்கிலே யரின் பிடியிலிருந்து விடுதலை பெறுவது எப்போது? உலகத்தவர் கண்களின் முன்னால் இந்தியர் பெருமிதமாக உலாவரும் நிலைமை எப்போது உருவாகும்'' என்பன போன் றவைகளையும் விவாதிப்போம். அப்போதும் சிரித்துக்கொண்டே ஆத்திரப்படாமல் பேசுவது திரு. ஜி. கே. எஸ். அவர்களின் இயல்பு.

திருவாளர் ஜி. கே. எஸ். அவர்கள் நல்ல விளையாட்டு வீரர். கோவையில் ஹாக்கி, கால்பந்து, கிரிக்கெட் போன்ற விளையாட்டுக் கழகங்கள் தோன்றவும் வளரவும் கோவை அத்லடிக் அசோசியேஷன் தோன்றவும் செயல்படவும் மூல காரணமாயிருந்தவர் திரு. ஜி. கே. எஸ். குறி தவறாது துப்பாக்கிச் சுடுவதிலும், குதிரைச் சவாரியிலும், பிரிட்ஜ் போன்ற விளையாட்டிலும் மிகுந்த தீரர். கோவை மாவட்ட அளவிலும், மாநில அளவிலும், தேச அளவிலும் நடைபெற்ற பிரிட்ஜ் விளை யாட்டுப் போட்டியை அமைத்ததில் இவர்க்குப் பெரும் பங்கு உண்டு.

காலம் சென்ற திரு. ஜி. டி. நாயுடு அவர்கள் அவ்வளவு எளிதில் யாரையும் புகழ்ந்துவிட மாட்டார். அவர் ஜி. கே. எஸ். அவர்களைப் பற்றிக் குறிப்பிடும்போது ''கோவையிலிருந்து வெளிநாடுகட்குப் படிக்கச் சென்ற பலரில் ஒழுங்காகப் படித்து பட்டம்பெற்று வந்தவர் சிலரே. அவர்களில் திரு. ஜி. கே. எஸ். அவர்களும் ஒருவர். ஆகையால்தான் எனக்குச் சுந்தரத்தைப் பிடிக்கின்றது'' என்று கூறியுள்ளார். எடுத்த காரியத்தில் கருத்தாக இருக்கும் இவரது தன்மைக்கு இதைவிடச் சான்று வேண்டுமா.

இலக்கியத்திலும் இசையிலும் திரு. ஜி. கே. எஸ். அவர்கட்கு நிறைந்த ஈடுபாடு உண்டு. காரைக்குடி கம்பன் அறக் கட்டளையின் அறங்காவலராக விளங்கும் இவர் கோவை கம்பன் கழகம் தோன்றிச் செயல்பட, தக்க ஏற்பாடு செய்தார். இந்தக் கழகம் நடத்திய கம்பன் விழா நிகழ்ச்சிகளைக் கோவை மக்கள் கேட்டுப் பெரிதும் மகிழ்ந்தனர். இவர்க்கு உள்ள இலக்கிய ஆர்வத்தின் காரணமாகத்தான் கோவை பாரதீய வித்யா பவனின் கோவைப் பிரிவின் தலைவராக இவர் இருந்து வருகின்றார். தெளிவாகச் சிந்திப்பதிலும் முடிவில் உரமாக இருப்பதிலும் இவர்க்கு ஈடு இவரே ஆவார்.

இவர்க்கு உயிர்களிடத்தில் மிகுந்த அன்பு உண்டு. பறக்கும் பறவைகளும், ஓடும் விலங்குகளும், நீந்தும் மீன்களும், பூக்கும் பூக்களும் இவர் அன்பிற்கு உரியன. இவைகளை உணர்ந்து நோக்கி ஈடுபட்டு மகிழும் உள்ளம் இவர்க்கு உண்டு. ஒரு நண்பர் இவர்தம் மென்மையான உள்ளத்திற்கு ஒரு உதாரணத்தினை எடுத்துச் சொன்னார். இந்த நிகழ்ச்சியைச் சொன்ன நண்பரும் மற்றும் சிலரும் அவர் இல்லத்திற்கு அவர் அழைப்பின் பேரில் சென்றனராம். இவர்கள் சென்று சில நிமிடங்கள் காத்திருந்த பிறகு அழைப்புக் கொடுத்த இவர் வந்தாராம். வரும்போது கண்கள் கசங்கியும், பேச்சு நெகிழ்ந்தும் இருந்தனவாம். பிறகுதான் இவர் அன்பாக வளர்த்து வந்த மீன் குஞ்சு இறந்தமையால் இவர்க்கு அந்த இக்கட்டான நிலை ஏற்பட்டது என்பதனைத் தெரிந்து கொண்டனராம். இத்தகைய ஈடுபாட்டினை நோக்கும்போது இவர்தம் மென்மையான உள்ளம் நன்கு தெளிவாகின்றது.

அரசியல் யாருக்கு என்ன நன்மையைச் செய்ததோ இல்லையோ, திரு. ஜி. கே. எஸ். அவர்களைப் பொருத்தவரை ஒரு பெரிய நன்மையைச் செய்துள்ளது. முன்பெல்லாம் யாரோடும் கலகலப்பாகப் பழகமாட்டார். அவர் உண்டு, அவர் வேலை உண்டு என்று இருப்பார். அரசியலில் ஈடுபட்ட பின்னர் பலரோடும் கலகலப்பாகப் பேசும் ஓராற்றலைப் பெற்றுள்ளார்; மேடைகளில் சரமாரியாகக் கருத்துக்களை எடுத்துச் சொல்லும் வல்லமையைப் பெற்றுள்ளார்.

**இவ்வாறு பல நல்லியல்புகளையும் சிறப்பு அம்சங்களையும் பெற்றுள்ள தொழிலதிபர் மணிவிழாச் செல்வர் ஜி. கே. சுந்தரம் அவர்கள் பல்லாண்டு வாழ்ந்து நாட்டுக்குரிய நல்ல பல பணிகளை மேலும் மேலும் செய்ய எல்லாம் வல்ல இறையருள் கூடுவதாக!**




*Wishing A Long & Peaceful*



*Prosperous & Purposeful Life*

# Suessen Textile Bearings Limited

*MAKERS OF*

**High Drafting Materials and Anti-Friction Bearings Suessen Wst.**



# அரசியல் தலைவர் சுந்தரம்

ரா. கிருஷ்ணசாமிக் கவுண்டர்

கோவை லட்சுமி மில் அதிபர்களில் ஒருவர் என்பதைவிட திரு. ஜி. கே. சுந்தரம் அவர்களை ஒரு அரசியல் தலைவர் என்ற முறையிலேயே நாடு நன்கறியும் என்பதைக் கூறுவதில் நான் பெருமைப் படுகிறேன். ஏனென்றால், கோவை மாவட்டத்தைப் பொறுத்த வரையிலும் அவர் இப்போது சார்ந்துள்ள சுதந்தி ராக் கட்சியை அமைத்து வளர்க்க அவர் அரும்பாடுபட்டார். அப்போது அவருக்கு நானும் துணையாய் நின்றேன் என்பதாலேயே அவர் ஒரு சிறந்த அரசியல் வாதி என்கிறேன்.

'பயன்மரம் உள்ளூர்ப் பழுத்தற்றால் செல்வம்
நயனுடை யான்கண் படின்'

என்ற குறளுக்கு இலக்கியமாய் நிற்பவர் நமது சுந்தரம் அவர்கள் என்றால் அது மிகையாகாது. அருட் செல்வமும் பொருட் செல்வமும் ஒருங்கே பெற்றுத் தாளாற்றித் தந்த பொருளையெல்லாம் தக்காங்கு முறையறிந்து மக்கட்குப் பயன் படும் நிலையில், கல்வித் துறையிலும் மருத்துவத் துறையிலும் இன்னும் பல்வேறு துறைகளிலும் நிறுவனங்கள் பல நிறுவி வாழ்வாங்கு வாழ்ந்து நாட்டுக்கு வழி காட்டும் பண்புமிக்க பெருங் குடும்பத்தைச் சார்ந்தவர் நமது சுந்தரம் அவர்கள்.

அத்தகைய செல்வக் குடும்பத்தில் உதித்தவர், தமது பதினாறு வயதிலேயே, அரசியலில் ஒரு உத்வேகத்துடன் ஈடுபட்டு, ராஜாஜி அவர்களுடன் வேதாரண்யம் உப்புச் சத்தியாக் கிரகத்தில் ஈடுபட்டுச் சிறைச்சாலை சென்றார்; ஆறு மாதச் சிறைத் தண்டனையும் பெற்றார் என்றால் அவரது கொள்கைப் பிடிப்பும் அரசியல் ஆர்வமும் துல்லியமாகத் தெரிகிறதல்லவா! இளமைப் பருவத்திலேயே ராஜாஜியின் பால் கொண்ட ஈடுபாடு நாளுக்கு நாள் வளர்ந்து ராஜாஜி அவர்களால் தொடங்கப்பெற்ற சுதந்திராக் கட்சியில் சேர்ந்து தன்னை அதற்கே அர்ப்பணித்துக் கொண்டவர்.

சுதந்திராக் கட்சி வளரவில்லை என்று அகில இந்திய அடிப்படையில் பலர் கைவிட்டும் தாம்மாத்திரம் அசையா நம்பிக்கையுடன், கட்சியை தமிழகத்தில் தலைமை தாங்கி நடத்த முன் வந்திருப்பதானது, அவரது ஆற்றலை வெளிப் படுத்துவதோடல்லாமல், ராஜாஜி பேரிலும் அவர் கொள்கைகள் பேரிலும் திரு. சுந்தரம் அவர்களுக்கு உள்ள பற்றுதலையும் நம்பிக்கையையும் எடுத்துக் காட்டுவதாக இருக்கிறது.

மேலும் அரசியல் கருத்துக்களை யார் கூறினும் அதை முறையாக, நாகரீகமாக, பிறர் மனம் புண்படாத வகையில் கூற வேண்டும் என்பதை திரு. சுந்தரம் அவர்கள் வலியுறுத்துவார். அத்தகைய நேர்மையான அரசியல்வாதி அவர்.

உள்ளத்தாற் பொய்யாதொழுகி, முறையிற் பிறழாது பொருளீட்டித் தைரியம், நேர்மை ஆகியனவற்றின் உறைவிடமாக வாழ்ந்து நாட்டிற்கு நலம் பல புரியும் திரு. சுந்தரம் அவர்கள் மணிவிழா நேரத்தில், அன்னாருக்கு நீண்ட ஆயுளும் ஆரோக்கியமும் நல்க இறைவனை இறைஞ்சுகின்றேன். □

# சுந்தரம் பிரதமரானல்.....?

ஜ. ராமபத்ரன், ஆசிரியர் "சாணக்யன்"

நம் அருமைத் தலைவர் ஜி. கே. சுந்தரம் பிரதமரானல் .? என்ற கேள்வியைப் போட்டவுடனேயே, ஆகா! பாருங்கள் பதவி ஆசை! என்று குரல் கொடுக்க ஆரம்பித்து விடுவர் ஆளும் கட்சியினர். ஜனநாயக அமைப்பில் அப்படி விருப்பம் தெரிவிப்பது தவரு?

விருப்பம் ஈடேறுமா என்பதல்ல முக்கிய விஷயம். இதன் மூலம் ஒரு நாட்டின் பிரதமருக்கு இருக்கவேண்டிய தகுதிகளை ஆராயலாம் அல்லவா? அவைகள் அனைத்தும் நம் தலைவரிடம் காணப்படுகிறதா என்பதை எண்ணிப் பார்க்கலாமல்லவா?

பிரதமருக்குத் தேவையான தகுதிகளும், நற்குணங்களும் சுந்தரம் அவர்களிடம் அபரிமிதமாக இருப்பதைக் காணமுடியும். நிர்வாகத் திறமைக்கு அவரது அனுபவங்கள் அஸ்திவாரமாக இருக்கின்றன. ஆடம்பரமில்லாத தன்னடக்கம் ஜி. கே. எஸ். அவர்களிடம் மட்டுமே காணப்படும் சிறப்பான அம்சமாகும். பிரச்னைகளைப் புரிந்து கொண்டு அவைகளுக்கு தீர்வுகாணும் முறைக்கு உதாரணமாக, அழியாச் சின்னங்களாகக் காட்சியளித்துக் கொண்டிருப்பவை அவரது மாபெரும் நிறுவனங்கள்.

பஞ்சாலைகளின் அகில இந்திய அமைப்பு "இந்தியன் காட்டன் மில்ஸ் பெடரேஷன்" என்பது. அதன் தலைவராக இருப்பது ஒன்றே அவரால் நிர்வாகத்தைத் திறம்பட நடத்த முடியும் என்பதற்கு அடையாளமாகும். அந்த அமைப்பு மத்திய அரசிற்குக் கிட்டத்தட்ட ஈடானதாகும். அதன் தலைமையை ஏற்று புகழோடு செயல்படுபவர்கள் உலகத்தையே புரிந்துகொண்டுவிடமுடியும்.

கோவையில் அவரது நேரடிப் பார்வையில் இயங்கும் பஞ்சாலைகளும், நூற்பு ஆலைகளும் செயல்படுவதைப் பார்த்தாலே போதும். நாட்டு மக்களைப் புரிந்து கொள்ளவும், அவர்களது தேவைகளை கூர்மையாக அறிந்து கொள்ளவும் அது பெரிதளவு பயன்படும். அங்குள்ள ஆயிரக்கணக்கான தொழிலாளர்களின் மகிழ்ச்சியில் சுந்தரம் திளைத்திருப்பதைக் காணவேண்டும். தொழிலாளர்களின் குடும்ப நலனில் அவர் கவனம் செலுத்தும் பாங்கு ஒன்றே நாட்டு மக்களின் தேவைகளைத் தீர்க்க பெருமளவு உதவும்.

அவர் தொழிலதிபர் ஆயிற்றே, ஆலை அதிபர் ஆயிற்றே என்ற ஐயப்பாடுகளை பலர் கிளப்பலாம். அரசியல் வாதிகளின் கையில் சிக்குண்டு நாடும், மக்களும் துன்புறுவதைப் பார்த்து வருபவர்களுக்கு ஒரு புதிய மாற்றம் தேவை, புதிய கண்ணேட்டம் வேண்டும் என்று நினைக்கத் தோன்றும்.

பிரதமர் பதவி அரசியல் வாதிகளின் ஏகபோக உரிமையா என்ன? தொழிலதிபர்களின் பணத்தை நம்பி அவர்கள் ஆட்சியில் அமருவது என்ன நியாயம்? இதில் எத்தனை தில்லுமுல்லுகள்! இவைகளை மறைத்து தங்களை அவர்கள் நல்லவர்கள்போல் காட்டிக் கொள்ளவில்லையா? அப்படி இருக்கையில்:

| | |
|---|---|
| நேர்மையில் | தயாள குணத்தில் |
| ஒழுக்கத்தில் | தார்மிகப்பற்றில் |
| பண்பாட்டில் | தன்னடக்கத்தில் |
| நாட்டுப்பற்றில் | தியாகத்தில் |
| மக்கள் நலனில் | சீலத்தில் |
| திறமையில் | பாரம்பர்யத்தில் |
| நல்ல எண்ணத்தில் | படிப்பில் |
| கை சுத்தத்தில் | உறுதியில் |
| தகுதியில் | ஊக்கத்தில், துணிவில் |

ஆகிய அனைத்திலும் பரிசுத்தமானவராகத்திகழும் ஒருவர்தான் இந்த நாட்டிற்கு பிரதமராக வரவேண்டும் என்று நினைப்பதில் என்ன தவறு இருக்க முடியும்? இத்தனை குணங்களையும் ஒருங்கே பெற்றுள்ள சுந்தரத்தைக் காட்டி "இவர் பிரதம ராகத் தகுதியானவர்" என்று கூறுவதை நாட்டுப்பற்றுள்ளவர்கள் உதாசீனம் செய்வார்களா!

தொழிலதிபர் மட்டுமல்ல நம் தலைவர். உழைப்பால் உயர்ந்தவர், ஆயிரக் கணக்கானவர்களை உயர்த்தியவர், நாட்டு விடுதலை வேள்வியில் தியாகம் செய்த செம்மல். ராஜாஜியின் ஆசிகளையும், பாராட்டுதலையும் பெற்றவர். சுதந்திராக் கட்சி யின் தலைமைப் பொறுப்பிற்கு அவரைத் தேர்ந்தெடுத்தார் ராஜாஜி. இது சுந்தரத் திற்கு மட்டுமே கிடைத்த தனிப்பெருமை. ராஜாஜி விட்டுச்சென்ற பணியை தமது ஆன்மிகக் கடமையாக எண்ணி சுந்தரம் தொடர்ந்து செய்துவரும் சிறப்பு இமயத்திற்கு ஒப்பாகும்.

கட்சி சின்னது என்று கூறலாம் பலர். பெரிய கட்சிகளின் கதியைப் பார்க்க வேண்டும். ஒழுங்கீனங்கள் மலிந்து கிடக்கின்றன. அப்படிப் பார்க்கும்போது சின்னக் கட்சியாகத் தோன்றினாலும் அதன் நோக்கம், சிந்தனையெல்லாம் மிக உயர்ந் தது என்பது புலப்படும். உலக மேதைகளில் ஒருவரால் தோற்றுவிக்கப்பட்ட கட்சி ஒன்றிற்குத் தலைமைப் பதவி ஏற்றிருப்பதே சுந்தரம் பிரதமர் ஆவதற்கு மிக மிகப் பொருத்தமானவர் என்பது விளங்கும்.

சுந்தரம் பிரதமரானால் உண்மையில் நாட்டில் சுபிட்சம் உண்டாகும்! மக்கள் கவலைகள் மறையும்! ஒழுக்கம் உயரும். உலக அரங்கில் மதிப்பு ஏற்படும்! உற்பத்தி பெருகும். வேலை வாய்ப்புகள் அதிகரிக்கும்! மக்கள் தேவைகள் தட்டுப்பாடின்றி கிடைக்கும்! பாலும், தேனும் ஓடும்!

**[திரு .ஜி. கே. சுந்தரம் அவர்களின் மணிவிழா அவரது தூயகுணங்களை எண்ணிப் பார்க்க வாய்ப்பு கொடுத்தது. அந்த மகிழ்ச்சியில் வெளியான சிந்தனைகளாகும் இவை.]**



# நல்ல உள்ளங்கள் வாழ்த்தும்!

❖ ( எஸ். எஸ். மாரிசாமி, எம். பி. )

1958-ஆம் ஆண்டு என்று நினைக்கிறேன். கோவை மாநகரத்தை அடுத்த ஒரு சின்னக் கிராமத்தில் தேவர் மன்றம் என்ற ஒரு சங்கத்தின் சார்பாகப் பொதுக் கூட்டம் ஒன்றில் பேசுவதற்காகச் சென்றிருந்தேன். அப்பொழுது முதுகுளத்தூர் கலவரம் நடந்த நேரம். 5 வாலிபர்களைக் கையைக் கட்டி கண்ணைக் கட்டி அதிகாரிகள் சுட்டார்கள் என்ற பயங்கரச் செய்தி நாடு முழுவதும் பரவி இருந்த நேரம். அந்த இளைஞர்கள் சுடப்பட்ட இடத்தையும் அங்கு சிதறிக்கிடந்த ரத்தத்தையும் நான் பார்த்து விட்டு வந்திருந்தேன். அன்று மாலை நடந்த கூட்டத்தில் முதுகுளத்தூர் கலவரம் பற்றிப் பேசினேன்.

கீழத்தூவல் என்ற கிராமத்தில் எப்படி இந்த இளைஞர்கள் சுடப்பட்டார்கள் என்பதை நான் விவரிக்கும்பொழுது கூட்டத்தில் இருந்த தாய்மார்களும் இளைஞர்களும் பதட்டம் அடைந்தார்கள். அவர்கள் பதட்டத்தைப் பார்த்த நானும் ஆவேசமாகப் பேசினேன். பேச்சு முடிந்ததும் கூட்டத்திற்குத் தலைமை வகித்தவர் எழுந்து முடிவுரையைப் பேசினார். அவர் பேச்சு ஆணித்தரமாகவும் ஆழ்ந்த கருத்துக்கள் கொண்டதாகவும் இருந்தது. அதோடு மட்டுமல்ல, அவர் பேச்சில் ஆவேசமும் அரசாங்கத்திற்குச் சிறிதும் பயப்படாத வீரமும் பிரதிபலித்தது. அந்த வீர உரையைக் கேட்ட போது நான் ஆச்சரியப்பட்டு அவர் யாரென விசாரித்தேன். அவர் தான் திரு. ஜி. கே. சுந்தரம் என்று கூறினார்கள்.

திரு. ஜி. கே. சுந்தரம் அவர்களைப் பற்றி நான் நிறையக் கேள்விப்பட்டிருக்கிறேன். உழைப்பால் உயர்ந்த உத்தமக் குடும்பம் அவரது குடும்பம். அவரது தந்தையார் உயர்திரு குப்புசாமி நாயுடு அவர்களைப் பற்றி கோவை மாநகரமே பெருமதிப்பு வைத்திருக்கிறது என்பது எனக்குத் தெரியும். அதோடு திரு. ஜி. கே. சுந்தரம் அவர்களைச் சார்ந்துள்ள பஞ்சாலைகள் மிகச் சிறந்த முறையில் நடப்பவை என்றும் முதலாளி தொழிலாளி என்ற பூசலுக்கு சிறிது கூட இடம் தராத சீரிய நிர்வாகம் என்பதையும் நான் கேள்விப்பட்டிருக்கிறேன். இவை எல்லாவற்றுக்கும் மேலாக தொழில் துறையில் புதுமையைப் புகுத்த வேண்டும் என்று இக்குடும்பத்திலுள்ள சகோதரர்கள் அத்தனை பேரும் முழு முயற்சி எடுக்கிறார்கள்—சின்ன வேலை, பெரிய வேலை என்ற பாகுபாடு கிடையாது—தொழிலாளிக்குத் தொழிலாளியாகவும் முதலாளிக்கு முதலாளியாகவும் பங்குதாரர்களுக்குப் பங்குதாரர்களாகவும் இருந்து அடக்கம், பொறுமை இவற்றோடு பணியாற்றக் கூடியவர்கள் என்பதையும் நான் கேள்விப் பட்டிருக்கிறேன்.

இவை எல்லாவற்றுக்கும் சிகரம் வைத்தாற்போல் மற்றொரு உண்மையும் நான் அறிய வாய்ப்பு இருந்தது. 1952-ஆம் ஆண்டில் காங்கிரஸ் என்று சொன்னால் அழுத பிள்ளையும் வாய் மூடும் என்ற நேரத்தில் வீடு தேடி வந்த காங்கிரஸ் டிக்கட்டை வேண்டாம் என்று மறுத்தவர் திரு. ஜி. கே. சுந்தரம் என்பதை கோவை காங்கிரஸ் பிரமுகரான திரு. சுப்ரி அவர்களும் திரு. வெங்கட்ராவ் அவர்களும் என்னிடத்தில் கூறியிருக்கிறார்கள்.

கோவை அய்யாமுத்து அவர்கள் திரு. ஜி. கே. சுந்தரம் தனது 16-வது வயதில் உப்பு சத்தியாகிரகத்தில் கலந்துகொண்ட கதையை என்னிடத்தில் ஏற்கெனவே விவரித்திருக்கிறார். ராஜாஜி துவங்கிய வேதாரண்ய சத்தியாகிரகத்தின்போது உயர் திரு. குப்புசாமி நாயுடு அவர்கள் குடும்பத்திலிருந்து யாராவது ஒருவரை சிறைக்கு அனுப்பவேண்டும் என்று முடிவெடுத்திருக்கிறார்கள். அதற்குப் பெரியவர் தாமே

போவதாகத் கூறியிருக்கிறார். ஆனால் பெரியவரை அனுப்ப மனமில்லாது நான் போகிறேன் என்று வலிய வந்து திரு. சுந்தரம் சிறை சென்றார் என்ற விவரத்தை எனக்கு நண்பர்கள் கூறியிருக்கிறார்கள்.

எனவே-இவ்வளவு பெரிய பின்னணி கொண்ட திரு. ஜி. கே. சுந்தரம் அன்றைய கூட்டத்தில் வீரத்துடனும் ஆவேசத்துடனும் பேசியதைக் கண்டு முதலில் ஆச்சரியப் பட்டேன் என்றாலும் பிறகு அந்த ஆச்சரியத்தைக் குறைத்துக் கொண்டேன்.

ராஜாஜி அவர்கள் சுதந்திராக் கட்சியை ஆரம்பித்தார்கள். அக்கட்சியின் பொதுச் செயலாளராக நான் இருந்தேன். திரு. ஜி. கே. சுந்தரம் அவர்கள் முதலில் மாவட்டத் தலைவராகவும் பிறகு மாநில உபதலைவராகவும் அதன் பிறகு மாநிலத் தலைவராகவும் ஆனார்கள். இந்தச் சந்தர்ப்பங்களில் அவரோடு நெருங்கிப் பழகும் வாய்ப்பு எனக்கு நிறைய ஏற்பட்டதுண்டு. இந்த நேரங்களில் அவருடைய தூய்மையான தொண்டும் பலன் கருதாத பணியும் எடுத்த முடிவிலிருந்து சிறிது கூட அசைந்து கொடுக்காத உறுதியும் கண்டு நான் வியப்படைந்திருக்கிறேன். திரு. ஜி. கே. சுந்தரம் அவர்கள் சுதந்திராக் கட்சியில் சேர்ந்த நேரத்தில் இன்னும் பல பிரமுகர் களும் பணக்காரர்களும் ஆலை அதிபர்களும் சேர்ந்தார்கள். ஆனால் காலப் போக்கில் அவர்கள் எல்லாம் என்ன ஆனார்கள் என்பதே தெரியவில்லை. திரு. ஜி. கே. சுந்தரம் அவர்கள் ஆரம்பத்தில் என்ன ஆர்வத்தோடு இருந்தாரோ அதே ஆர்வம் இன்றுவரை சிறிது கூடக் குறையாமல் இருப்பது மற்றவர்களுக்குப் பொறாமையைக் கூட ஏற்படுத்தும்.

1962ஆம் ஆண்டில் சுதந்திராக்கட்சி முதல் தடவையாக தேர்தலில் தலையிடுகிறது. இத் தேர்தலில் திரு. ஜி. கே. சுந்தரம் அவர்கள் கோவை நாடாளுமன்றத் தொகுதிக்கு நிற்க வேண்டும் என்பது ராஜாஜி அவர்களின் ஆசை. கோவை மாவட்டத்திலுள்ள நண்பர்கள் திரு. ஜி கே. சுந்தரம் அவர்கள் நின்றால்தான் வெற்றிபெறமுடியும் என்றதும் ராஜாஜி அதை ஒப்புக்கொண்டுவிட்டார். ஆனால் என்னைப் பொருத்தவரை திரு. ஜி.கே எஸ்.அவர்களை இவ்வளவு பெரிய தேர்தலில் ஈடுபடுத்த விருப்பமில்லை. இதை லேசாக அவர் காதில் ஒரு முறை போட்டேன். ஆனால் அவரோ வெற்றி தோல்வியைப் பற்றி சிறிது கூடக் கவலைப்படவில்லை. "தேர்தலில் எதுவும் ஏற்படும். வெற்றி பெற்றால் நல்லது. தோல்வி கண்டால் எதற்குத் துவளவேண்டும்?'' என்று கேட்டார்கள்.

அவரது உறுதியைக் கண்டு நான் ஆச்சரியப்பட்டாலும் பல இடங்களுக்கு ஓடி ஆடிபாடுபடக்கூடிய ஒருவரை ஒரு தேர்தலில் முடக்கிவிடப்போகிறோமே என்ற கவலை எனக்கு இருக்கத்தான் செய்தது. இந்தக் கவலையை ராஜாஜியிடத்தில் நான் கூறிய போது அவர்களும் எனது வாதத்தில் உண்மை இருக்கிறது என்பதை உணர்ந்து என்ன செய்யலாம் என்று யோசித்தார்கள். ஆனால் கோவையில் இருந்த திரு. ஜி. கே. சுந்தரம் அவர்களோ இதைப் பற்றியே கவலைப்படவில்லை. ஒரு நல்ல நாளாகப் பார்த்து தேர்தல் வேலையைத் துவங்கிவிட்டார்கள். இந்தச் செய்தியைக் கேட்டதும் நாங்கள் எல்லாம் ஆச்சரியப்பட்டுப் போய்விட்டோம்.

ஊர் ஊராகக் கிராமம் கிராமமாகச் சென்று 'தேர்தலுக்கு நீங்கள் நில்லுங்கள், நில்லுங்கள்' என்று பலரை வற்புறுத்த அவர்கள் 'அடுத்த வாரம் சொல்லுகிறோம், அடுத்த மாதம் சொல்லுகிறோம்' என்று தட்டிக் கழிக்கும் நேரத்தில் சிறிது கூட யோசிக்காமல் வசதி படைத்த ஒருவர் மிகப்பெரிய தொகுதியான கோவை நகரத் தொகுதியில் நிற்கிறேன் என்று முன் வருவது எங்களுக்கு ஒரு புறம் மகிழ்ச்சியாகவும் மற்றொரு புறம் வியப்பையும் ஏற்படுத்தின. அந்தத் தேர்தலில் பல இடங்களில்போட்டி போட்டோம். ஆனால் கிடைத்த வெற்றி மிகக் குறைவான வெற்றி. தேர்தலில் தோற்றவர்கள் பல பேர். அதில் திரு. ஜி. கே. சுந்தரம் அவர்களும் ஒருவர். நானும் நாடாளு மன்றத்துக்கு மதுரையில் நின்று தோல்வி கண்டேன்.

தோல்வி அடைந்த பிறகும் திரு. ஜி. கே. எஸ். அவர்கள் சிறிது கூட தளர வில்லை. அடுத்த வாரமே தனது பெரிய மோட்டாரை எடுத்துக்கொண்டு நெல்லை மாவட்டத்துக்கு சுற்றுப் பிரயாணம் செய்யலாம் என்று கிளம்பி விட்டார்கள். அந்த

நேரத்தில் வெளியே வருவதே மிகக் கஷ்டமாக இருந்த காலம். ஒரு புறம் காங்கிரசும் மற்றொரு புறம் தி. மு. கழகமும் வெற்றிவாகை சூடியிருந்த நேரம். சுதந்திராக் கட்சி என்று சொல்லி வெளியே வருவதற்குக் கூச்சப்பட்டுக்கொண்டிருந்த நாட்கள். தேர்தல் முடிவுகள் வரவர சுதந்திராக் கட்சி படு தோல்வி அடைந்தது என்பதைக் கண்டதும் ராஜாஜி அவர்கள் "நாங்கள் முறியடிக்கப்பட்டு விட்டோம்" என்று பகிரங்கமாக ஒப்புக்கொண்டு விட்டார்கள். அந்த அறிக்கையை பார்த்ததும் நமது நண்பர்கள், மனம் சோர்ந்து விடுவார்களோ என்று நானும் தமிழ்நாடு முழுவதும் சென்று தேர்தலில் தோற்றவர்களை எல்லாம் பார்த்துவிட்டு கோவைக்கு வந்தேன். கோவையில் திரு. ஜி. கே. சுந்தரம் அவர்களைப் பார்த்தபோது அவர்கள்சிறிதுகூட மனம் தளராமல் நெல்லை மாவட்டத்தில் சுற்றுப் பிரயாணம் செய்வது பற்றிப் பேசியது எனக்கு வியப்பை ஏற்படுத்தியது.

1966-ஆம் ஆண்டு ராஜ்யசபைத் தேர்தலில் திரு. ஜி. கே. எஸ். அவர்கள் வேட்பாளராக நின்றார்கள். இதில் எதிர் பார்த்ததற்கு எல்லாம் மேல் முழு வெற்றியும் அடைந்தார்கள். இந்த வெற்றிக்கு சுதந்திராக் கட்சி நண்பர்களும் திராவிட முன்னேற்றக் கழகத் தோழர்களும் குறிப்பாக இப்பொழுது முதல்வராக இருக்கும் திரு. மு. கருணாநிதி அவர்களும் மிகப் பிரயாசை எடுத்துக் கொண்டார்கள்.

திரு. ஜி. கே. எஸ். அவர்கள் வெற்றி பெற்ற செய்தி தமிழ்நாட்டிலே பெரும் பரபரப்பை ஏற்படுத்திய செய்தியாகும். எல்லாரையும்விட அதிக ஓட்டுகள் அவர் பெற்றார் என்று நினைக்கிறேன். அல்லது இரண்டாவது இடத்தை அவர் வகித்தார் என்பது என்னுடைய நினைவு. இடம் எப்படி இருந்தாலும் அவர் வெற்றி பெற்றது சுதந்திராக் கட்சி ஊழியர்களுக்கு எல்லாம் பெரும் பெருமையாக இருந்தது.

ஆறாண்டுக்காலம் திரு. ஜி. கே. எஸ். அவர்கள் ராஜ்யசபை உறுப்பினராக இருந்தார்கள். ராஜ்யசபைக்குப் போகும் பொழுதெல்லாம் அவர் பேசாமல் திரும்பியதில்லை. எந்த ஒரு பிரச்னை இருந்தாலும் அந்த பிரச்னையைப் பற்றி நல்ல ஆராய்ச்சி செய்து குறிப்புகள் எல்லாம் எடுத்துக்கொண்டு வந்து ராஜ்ய சபையில் அவர் பேசுவார். அவர் பேசுவதை சம்பந்தப்பட்ட மந்திரிகளும் சபையினரும் உற்றுக் கேட்பார்கள். காரணம் ஆவேசம், பதட்டம் இருக்காது. அதற்கு மாறாக புள்ளி விவரங்களும் நடைமுறைக்கு ஒத்துவரக் கூடிய கருத்துக்களும் அவரது பேச்சில் பிரதிபலிக்கும். அதோடு தொழில் துறையில் அவருக்குள்ள அனுபவத்தை பக்குவமாக அவர் எடுத்துச் சொல்லி ஆட்சியாளர்கள் இந்த மாதிரியாக நடக்கவேண்டும் என்று வேண்டிக்கொள்வது மந்திரிமார்களைப் பெரிதும் கவரும். அவர்கள் பதில் சொல்லும் பொழுது 'திரு. ஜி. கே. சுந்தரம் அவர்கள் சொல்வது போல' என்று கூறி பதில் தருவார்கள்.

1972-ல் திரு. ஜி. கே. எஸ். திரும்பவும் நிற்கும் வாய்ப்பு இருந்தது. அவர் சம்மதம் தெரிவித்திருந்தால் அவர் வெற்றிபெற பல நண்பர்கள் உதவுவதாகக் கூறினார்கள். இதை நான் அவரிடம் தெரிவிக்க, அவர் வேண்டாமென்றார். இது பலருக்கு ஆச்சரியத்தை அளித்தது.

சுதந்திராக் கட்சியின் கொள்கைகளை மனப்பூர்வமாக ஒப்புக் கொண்டவர்கள் தமிழ்நாட்டில் எத்தனை பேர்கள் இருக்கிறார்கள் என்று கேட்டால் என்னைப் பொறுத்தவரை முதல் இடத்தை திரு. ஜி. கே. எஸ் அவர்களுக்குத்தான் கொடுப்பேன். ராஜாஜி இடத்தில் பல பேர் வருவார்கள். என்னென்னவோ சொல்வார்கள். எந்த அளவுக்கு அவை உண்மை என்பது ராஜாஜிக்குத்தான் தெரியும்.

ராஜாஜி அவர்களை அவசியம் இருந்தாலொழிய, திரு. ஜி. கே. எஸ். அவர்கள் அடிக்கடி பார்த்து அவருக்குத் தொந்தரவு கொடுக்க மாட்டார்கள். ஆனால் ஏகலைவன் மாதிரியாக ராஜாஜி என்ன நினைப்பார் என்று தானே யூகித்துக்கொண்டு தனது கருத்தை வெளியிடுவார்கள். அனேகமாக அந்தக் கருத்து ராஜாஜிக்கு ஒத்ததாகவே இருக்கும்.

இன்று அவருக்கு 60 ஆண்டுகள் பூர்த்தியடைந்து 61 ஆவது ஆண்டு துவங்கியிருக்கிறது. அவரது சேவை இன்னும் பல ஆண்டுகளுக்கு நாட்டுக்குத் தேவைப்படும் என்பதை விளக்கத் தேவையில்லை. தனக்கு என்னதான் தொல்லைகள் இருந்தாலும் அதைச் சிறிது கூட வெளியில் காட்டாமல் மற்றவர்களுடைய தேவைகளை அறிந்து அதை அவர்களுக்கு தாராளமாகச் செய்து கொடுப்பதில் திரு. ஜி. கே. சுந்தரம் அவர்கள் இன்று லட்சத்தில் ஒருவராக ஏன் கோடியில் ஒருவராக விளங்குகிறார். அவர் ஆற்றியிருக்கும் நற்காரியங்கள் ஏராளமானவை. அதே போல அவர் ஆற்ற வேண்டிய காரியங்களும் ஏராளம் உள்ளன! இன்று நாட்டில் தாண்டவமாடும் வறுமையை தொழில் பெருக்கத்தின் மூலமாகத்தான் போக்கமுடியும். தொழில் பெருக்கம் தர்மகர்த்தா முறையில் இருக்கவேண்டும் என்பது மகாத்மாவின் கொள்கையாகும். இந்தக் கொள்கையைத்தான் அண்ணல் ராஜாஜி அவர்கள் வற்புறுத்தினார்கள். திரு. ஜி. கே. சுந்தரம் அவர்கள் இந்த கொள்கையை நூற்றுக்கு நூறு அப்படியே பின்பற்றி வருகிறார் என்றால் அது மிகையல்ல. அவரது சேவை பெருகவேண்டும். அவரது உடல் நலம் சிறப்புற அமையவேண்டும் என்பது என் வேண்டுகோள் மட்டுமல்ல, தமிழ்நாட்டிலுள்ள அத்தனை நல்ல உள்ளங்களும் அவர் நலனுக்காக வாழ்த்துக்களைத் தெரிவிக்கும் என்பது திண்ணம். □


With best compliments from :

KIKANI
COTTON
COMPANY





12/42, Syrian Church Road No. 1
COIMBATORE-1



With best compliments from :



THE NARASIMHA MILLS (PRIVATE) LIMITED



*Cotton Unit :*
NARASIMMANAICKENPALAYAM
COIMBATORE - 641 031
Telephone : 34999

*Staple Fibre Unit :*
KANNAMPALAYAM
SULUR - 641 402
Telephone : 88-227

# 'இன்னும் ஒரு நூற்றுண்டு இரும்'



(அ. ச. ஞானசம்பந்தன், சென்னை)

தம் பெயருக்கு ஏற்ப என்றும் இளமையுடன் திகழும் திரு. ஜி. கே. சுந்தரனர் அறுபதை அடைந்து விட்டார் என்ருல் ஓரளவு வியப்பே உண்டாகிறது. பல்வேறு தொழில் நிலையங்களின் தலைவர், மாபெரும் பொறுப்புக்கள் பலவற்றை வகிப்பவர் எவ்வாறு இத்துணைத் தூரம் தம் இளமையைக் காப்பாற்ற முடிகிறது என்று நினைக்கத் தொடங்கியவுடன் அதன் காரணம் எளிதில் புலனாகிவிடுகிறது.

'மனிதன் ரொட்டித் துண்டால் மட்டும் வாழவில்லை' என்ற பழைய விவிலிய வாக்கு இதற்கு விடை கூறுகிறது. அப்படியானல் மனிதன் மனத்தால்தான் அதிகம் வாழ்கிறன் என்ருகிறது. இந்த மனந்தானே உடலை நடத்திச் செல்லுகிறது! உடல் இளமையுடன் காணப் பெறுகிறது என்ருல் அதன் பொருள் என்ன? மனம் இளமையுடன் உள்ளது என்பதே பொருளாகும். மனம் எவ்வாறு இளமையுடன் இருக்கும். 'பண்புடைமை' என்ற உறையுள் மனம் இருப்பதானல் அது இளமையுடன் இருக்கும். பண்புடைமை, ஆன்ற அறிவுடைமை முதலியவற்ருல் நிறைந்துள்ள ஜி. கே. சுந்தரனர் இளமையுடன் இருப்பதில் வியப்பில்லை.

ஆன்ற அறிவும், செல்வமும் ஒருங்கிணைந்திருத்தல் அருமையாகும். ஒரோவழி இவை இரண்டும் சேர்ந்த விடத்தும் பண்புடைமை அமைவது கடினம். இவை மூன்றும் அரிதினும் அரிதாக ஒன்று கூடினும் அடக்கமுடைமை இவற்றுடன் ஒன்ருகச் சேர்தல் கோடியுள் ஒன்ருகும்.

கோடி மனிதருள் ஒருவராக உள்ள திரு. ஜி. கே. சுந்தரனரிடம் அறிவு, செல்வம், பண்பு, அடக்கம் என்பவை போட்டியிட்டுக்கொண்டு குடிபுகுந்துள்ளன. இவற்றுள் எது அதிகம் எது குறைவு என்று கண்டு பிடிப்பது இயலாத காரியம்.

இத்தகைய பண்புகள் இயற்கையாகவும், முயற்சியின் மூலமும் அமைதல் வேண்டும். ஆன்ற குடிப் பிறந்தமையானும், முற்பிறப்புக்களிற் செய்த தவத்தாலும் இயற்கையாக அமைய வேண்டிய பாகம் நன்கு அமைந்துவிட்டது. இவர் முயற்சியால் தேடவேண்டிய எஞ்சிய பகுதியை நிரப்புவதற்கு இவர் மேற்கொண்ட முயற்சியையும் பாராட்டல் வேண்டும். மகாத்மா, இராஜாஜி போன்ற பண்புடையாளர்களின் தொடர்பை இளமைக் காலத்திலேயே பெற்றமையின் இரண்டாவது பகுதியும் நிரம்பி விட்டது.

எனவேதான் திரு. ஜி. கே. சுந்தரனார் அனைத்துப் பண்புகளும் நிரம்பிய முழு மனிதராக **(Full Personality)** இன்று நம்மிடையே காட்சி அளிக்கின்றார். அரிதின் முயன்றும் தவத்தாலும் பெறும் இப்பண்புகளைக் கட்டிக்காக்க வேண்டியதும் மிக இன்றியமையாததாகும். போட்டி நிறைந்த இன்றைய உலகில் பெரும் தொழில்களின் தலைவராக உள்ள ஒருவர் இவற்றைப் பெற்றிருப்பதுடன் கட்டியும் காக்கின்றார் எனில் அதன் இரகஸ்யம் ஒன்றுண்டு.

எத்துணை மன உறுதிபடைத்தவர்களும் தம் சாமர்த்தியம் ஒன்றையே துணையாகக்கொண்டு இவற்றைக் காத்தல் இயலாத காரியம். கட்டிக் காக்கவேண்டுமாயின் இறைவனுடைய திருவருளை ஓயாது நாடும் மனமும், கீதையில் கூறப்பெற்றுள்ளபடி கர்மயோகியின் உறுதியும் இருந்தால்தான் இப்பண்புகளைக் கட்டிக்காக்க முடியும்.

திரு. ஜி. கே. சுந்தரனார் ஆழ்ந்த இறைபக்தியுடையவர். கம்பன் பாடல்களும், சின்மயானந்தர் போன்றவர்களின் கீதைச் சொற்பொழிவுகளும் அவருக்கு பேருதவி புரிந்துள்ளன.

இறைவன் திருவருளை நாடி இருப்பதால் ஒப்பற்ற அமைதியையும் (சாந்தம்) சிறந்தவற்றைக் கற்றல், கேட்டலால் உள்ளத்து உறுதியும் படைத்து விளங்குகிறார்.

இப்பொழுது அவருடைய இளமையின் இரகஸ்யம் நன்கு புரிகிறதல்லவா? இந்த அறுபதாண்டு இளைஞர் வைணவர்கள் கூறுவதுபோல இன்னும் ஒரு நூற்றாண்டு இருந்து மக்களுக்குத் தொண்டுபுரிய இறைவன் திருவருள் பாலிப்பானாக. □

*We greet you on the occasion and wish you all the happiness*

| | |
|---|---|
| **A. Pandiarajan** | Commission Agent, Virudhunagar |
| **S. Periasamy & Co.** | ,, ,, |
| **K. K. S. S. Narayana Reddiar Firm** | ,, ,, |
| **M. S. Chidhambara Nadar Firm** | ,, ,, |
| **V. S. Ganapathy Thevar Sons** | ,, ,, |
| **T. C. S. Perumal Nadar Sons & Co.** | ,, ,, |

**V. P. Periasamy Nadar Firm** — Cotton Seed Merchants, Virudhunagar.

**Sri Mahalakshmi Cotton Traders** — Cotton Merchants, Virudhunagar.

# புன்னகை பூத்த புனிதன்

★★

கோவை அ. அய்யாமுத்து.

உலகிலே மக்களின் மனதை வசீகரிக்கும் சக்தி பெற்றவர் பலர்.

வீரதீர பராக்கிரம சாலிகள்.

உடல் வண்ணமும், வலிவும் பெற்றவர்கள்.

மனத்திட்பமும், யாருக்கும் அஞ்சா நெஞ்சுரமும் உற்றவர்கள்.

நேர்மையும், நீதி பிறழாத சான்ருண்மையும் உடையவர்கள்.

நற்குணமும், கல்வியும், கேள்வியும், கேண்மையும், சீலமும் அணிகலன்களாகக் கொண்டவர்கள்.

சொற்றிறனும், செய்திறனும் வெற்றி முழக்கக் கற்றவர்கள்......

என்று பல்வேருன திறம்படைத்தவர்களைக் கூறலாம்.

ஆனல் பாருங்கள்!

இன்று விழா நாயகனை விளங்கும் என் நண்பர் G. K. சுந்தரம் அவர்கள் மிகமிக எளிதான முறையில் எல்லோரையும் வசீகரிக்கச் செய்யும் ஒரு பேராற்றலைப் பெற்றிருக்கிருர்.

காசு பணம் பைசாச் செலவு செய்யாமல் புன்முறுவல் தவழ்ந்து விளையாடும் இன்முகம் ஒன்றைக்கொண்டே அவர் எல்லோரையும் வசீகரித்து வரும் அற்புதத்தை என்னென்பேன்!

சுந்தரம் அவர்கட்கும் எனக்கும் தொடர்பும், நட்பும், தோழமையும்பெறச் செய்தது அண்ணல் இராஜாஜி அவர்களால் ஆரம்பிக்கப்பட்ட சுதந்திரக் கட்சியே ஆகும்.

1960-ம் ஆண்டிலிருந்து 1970-ம் ஆண்டு முடியப் பத்தாண்டுகட்கு மேலாக அன்பர் சுந்தரத்தின் புன்முறுவலைப் பருகிப் பருகித் திளைத்தேன். அவரோடு பல ஊர்களுக்கு அவருடைய மோட்டாரில் பிரயாணம் செய்திருக்கிறேன். பல பொதுக் கூட்டங்களிலும், அரசியல் மேடைகளிலும், மகாநாடுகளிலும், அவரோடு தோள்சேர நின்றிருக்கிறேன். உண்டு, களித்து, உல்லாசப்பொழுது போக்கியிருக்கிறேன்.

அவருக்கும் எனக்கும் ஒரு இணை பாலமாகவும், தோன்ருத் துணையாகவும், சுருசுருப்பே உருவெடுத்தாற் போன்று விளங்கிய ஒரு பேரன்பர் இருந்தார். கட்சிக்கும், நாட்டுக்கும், நல்ல பல காரியங்கட்கும் இரவு பகல் பாராது, அயராது, உழைத்துழைத்து, உடல்மெலிந்து நலிந்து, உயிர்நீத்த உத்தமன் திரு. எஸ். வெங்கட்ராவ் அவர்கள் எனக்கு மட்டுமல்ல, அன்பர் G. K சுந்தரம் அவர்கட்கும் மெய்யன்பராகவும், வலக்கரமாகவும் வாழ்ந்திருந்தார்.

கோபதாபங்கட்கு நான் பேர்போனவன். சிற்சில சமயங்களில் எரிமலை போல் கனல் கக்குவேன், அப்போதெல்லாம் பார்க்க வேண்டுமே திரு. G. K. சுந்தரத்தின் திருமுகத்தை!

புன்னகை குன்றமாட்டார்!
முகப் பொலிவை இழக்கமாட்டார்!
இன்சொற்கள் தவறமாட்டார்!

அவருடைய அமைதியும், பண்பும், பரிவும், வியாசபகவான் சிருஷ்டித்த தர்மராசனையும் தோற்கடிப்பதாக விளங்கும்.

அடே அப்பா!

திரு. G. K. சுந்தரத்துக்கு இணை அவரேதான். வேறு எவரும் இல்லையெனத் துணிந்து கூறுவேன்.

வாழ்க! G. K. சுந்தரம்!
வாழ்க பல்லாண்டுகள்!
வலிமை மிக்க தோளனை
மாந்தருக்குத் தோழனை
வாகைமீது வாகைசூடி
வையம் புகழ் பாடிட
வாழ்க நூறு ஆண்டுகாலம்
வன்பிணிகள் தீரவே!

என்று பாடிப்பாடி உளங்கனிந்துஅன்பர் G. K. சுந்தரம் அவர்களை விடப் பதினறு ஆண்டுகள் முதிர்ந்தவன் என்ற உரிமையுடன் வாயார, மனமார அவரை வாழ்த்துகிறேன். □



# வேதாரண்யம் கண்ட வீரர்

*****************************

மேம்பாலம் B. ராமமூர்த்தி, B. COM., B L., கோவை.

தேசிய உணர்வும் நாட்டுப் பற்றும் தியாகப் பண்பும் ஊற்றெடுக்க தன் தந்தையிடம் கலந்தாலோசிக்காமல் ஒரு "பள்ளி மாணவன்" போராட்டத்தில் கலந்துகொள்ள தன் பெயரைப் பதிவு செய்து கொண்டான்.

இது இன்று நேற்றல்ல, அடிமை யுற்ற இந்திய நாட்டில் சுதந்திர உணர்ச் சியைப் பரங்கியர்கள் வெறித்தனமாக அடக்கிய காலம்.

1930 ஆம் ஆண்டு வரலாற்றுபிரசித்தி பெற்ற தண்டி யாத்திரை தொடங்க யிருக்கும் நேரம்.

அகிம்சா மூர்த்தி உப்பு சட்டத்தை மீறும் போராட்டத்தில் பெருவாரியாக பங்கேற்கும்படி நாட்டு மக்களுக்கு அறை கூவல் விட்டு இருந்தார். தமிழ் நாட்டில் தென்னக காந்திஜி ராஜாஜி தலைமையில் வேதாரண்யத்தில் உப்பு சத்தியா கிரஹம் செய்ய தொண்டர்கள் திரண் டனர்.

இப்படிப்பட்ட சட்ட மறுப்புப் போராட்டத்தில் கலந்துகொண்ட ஒரு மாணவன் தேசிய உணர்வால் உந்தப்பட் டான்.

போராட்டத்தில் பால்மனம் மாருத தன் மகன் கலந்துகொள்வதை தந்தை இசையவில்லை. பெற்றோருக்கும், மகனுக் குமிடையே நீண்ட வாக்கு வாதமே நடந் தது. இளம் பருவத்தைக் காரணமாகக் காட்டி மூத்தவனை போராட்டத்திற்கு அனுப்பலாம் என்று தந்தை கருத்து தெரிவித்தார். ஆனால் அந்த மகனோ தந்தையின் ஆலோசனையை ஏற்றுக் கொள்ளாது மறுப்பு தெரிவித்தார்.

"தொண்டர் படைக்கு பெயரை பதிவுசெய்து கொண்டது நான்தானே தவிர அண்ணனல்ல. நான் போராட் டத்தில் கலந்தேயாகவேண்டும்" என்று பிடிவாதமாகக் கூறினன்.

"பெயர் கொடுக்கும்போது என் னைக் கேட்டா கொடுத்தாய். இப்பொ ழுது மட்டும் ஏன் அனுமதி கேட்கிருய்" தந்தை சினந்து கூறினர்.

"நீங்கள் தீவிர காந்தியவாதி. தேசப் பற்றை என் இரத்தத்திலேயே புகுத்தி யிருக்கிறீர்கள். எனக்கு அனுமதி தர மாட்டீர்கள் என்பதை என்னல் நினைத் துக்கூட பார்க்கமுடியவில்லையே" என்று தன் ஏக்கத்தை வெளியிட்டான் அந்த மாணவன்.

தந்தை வாயடைத்து நின்றுவிட்டார். மகனின் உறுதியைக் கண்டு பெற்ற மனம் பெருமைப்பட்டது. நிறைந்த உள்ளத்தோடு அறப் போராட்டத்தில் கலந்துகொள்ள வழியனுப்பப்பட்டார்.

சங்க கால இலக்கியத்திலே, புற நானூற்றிலே போர்க்களம் செல்லும் மகனுக்குவழியனுப்பும் பாடலைப்படித்து இன்புற்றிருக்கிறோம்.

ஆனல், இந்த நூற்ருண்டில், நாட்டு விடுதலைக்காக தியாகத்தழும்பை ஏற்று, இன்று நம்மிடையே வாழ்ந்து அழகான மணிவிழாவைக் கொண்டாடிய திரு. ஜி.கே. சுந்தரம்தான் அந்த தந்தையோடு போராடிய மாணவர். முற்ருப் பருவத்தில் முளைத்திருந்த தேசபக்தியால்பள்ளி செல்லும் காலத்தில் சிறை சென்று, வகுப்பிலே படிக்கும் பாடங்களை வாழ்க்கையிலேயே நேரடியான அனுபவங்களிலே பெற்று, இன்று நாடும் நல்லோர் உள்ளமும் போற்றும் ஓர் ஒப்பற்ற தலைவராகவும், மனித உணர்ச்சிகளை மதிக்கும் ஓர் உத்தமராகவும், எல்லோராலும் ஒருமுகமாக ஏற்றுக் கொள்ளப் பட்டவர்தான் திரு. ஜி. கே. சுந்தரம்.

கொதித்தெழுந்த சத்தியாகிரகிகள் கால்நடையாகவே திருச்சியிலிருந்து வேதாரண்யம் நோக்கிச் சென்ருர்கள்.

அச்சமில்லை - அச்சமில்லை என்ற பாரதியாரின் பாடலும், கத்தியின்றி, ரத்தமின்றி யுத்தமொன்று வருகுது - யுத்தமொன்று வருகுது என்ற நாமக்கல் கவிஞரின் பாடலும், விண்ணதிரச் செய்தன.

ஆயுதத்தையே நம்பி யுத்தம் நடத்திய ஆங்கிலேயருக்கு, இந்த ஆன்ம சக்தியைப் புரிந்து கொள்ள முடியவில்லை.

அப்பொழுது தஞ்சை மாவட்டத்து ஆளுநர் 'தார்ன்' என்ற அதிகாரி போராட்டக்காரர்களுக்கு, உணவோ ஒதுங்க இடமோ கொடுக்கக்கூடாது என்ற அவசர தடை உத்தரவைப் பிறப்பித்து லட்சக் கணக்கான துண்டு நோட்டீஸ்களைக் கிராமங்கள்தோறும் விநியோகித்து இருந்தார். அதிகார அச்சுறுத்தல் ஒரு பக்கமும், நாட்டுப்பற்று பின்ஞெரு பக்கமுமாக மக்கள் தத்தளித்தனர்.

அவர்கள் இறுதியாகக் கையாண்ட யுக்தி, வரலாற்றுப் பார்வையாளர்களை மலைக்கச் செய்திருக்கிறது. தயிர்சாதத்தை சட்டிகளில் போட்டு துணியால் மூடி, ஆங்காங்கே பெரும் மரங்களுக்குஅடியில் மண்ணில் புதைத்து வைத்திருந்தார்கள். சத்தியாகிரகிகள் மர நிழல்களில் இளைப்பாறியும், மணலிலிருந்து தோண்டிய சட்டியில் உள்ள உணவை அருந்தியும் தூரத்தை சிரமமின்றி கடந்தனர்.

வேதாரண்யத்தில் கடல் நெடுக மக்கள் வெள்ளம் நெளிந்து கொண்டிருந்தது. ஏற்கனவே பயிற்சியளிக்கப்பட்ட முறையில் அநீதியான உப்புச்சட்டத்தை எதிர்த்து, சுந்தரமும், இதர தொண்டர்களும் உப்பை அள்ளினர்கள். முன்னேறிக்கொண்டிருந்த தேசபக்தர்கள் மீது வேங்கையென காவல்படையினர் பாய்ந்தனர். இரும்புப் பூண்கள் சுற்றப்பட்ட தடிகளால் அடிகளைப் பொழிந்தனர். இரண்டு மூன்று நிமிடங்களில் தரைமுழுவதும் மனித உடல்கள், எங்கும் முக்கல், முனகல்.

பதினறு வயதே நிரம்பிய சுந்தரத்தின்மீது, உப்புச் சட்டம் 74-ம் பிரிவு இ. பி. கோ. 146 பிரிவின்கீழ் குற்றப் பத்திரிகை வாசிக்கப்பட்டது. நீதி மன்றத்தில் வயதை 20 என்று கூட்டியே கூறினர்.

மேஜராகாத இளம் குற்றவாளிகளை மன்னிக்கவும், சீர்திருத்தப் பள்ளிக்கு அனுப்பவும் சட்டத்தில் இடமுண்டு. சிறைசென்று, மறுப்பைத் தெரிவிக்கும் தம் லட்சியத்திற்கு இடையூறு ஏற்படக் கூடாதென்றே கூறிய பொய் இது.

குற்றத்தை ஒப்புக்கொள்ளவும், நீதி மன்றம், ஆறு மாத சிறை தண்டனை சுந்தரத்திற்கு அளித்தது. அதிகபட்ச தண்டனையைப்பெற வேண்டுமென்று, சத்தியாகிரகிகளிடையே ஒருவித உத்வேகம்.

திருச்சி ஜெயிலில், இரண்டாயிரம் அரசியல் கைதிகளுடன் சுந்தரமும் அடைக்கப்பட்டார்.

உப்பும் ஊட்டமும் அற்ற சிறையிலே வழங்கும் உணவிற்கு தன்னைத் தயார் படுத்திக் கொண்டார். மன்னிப்புக் கடிதங்கள் எழுதி சிறையைவிட்டுச் சென்றவர்கள் பலர். ஆனல் சுந்தரமோ, இந்தப் புதிய சூழ்நிலையை, கட்டுப்பாடுகளை அணுகிய தன்மையே வேறு. சிறை உடலுக்கேயன்றி உள்ளத்திற்கல்ல. தன்னைத்தானே அடக்கிக்கொள்ள ஓர் வாய்ப்பும், காலா காலங்களில் ஒருவர் தன் செயல்களை செய்துகொள்ளும் பழக்கமும், பொறுமையைக்கடைப்பிடிக்கவும் சிறை வாழ்வு தனக்கு வாய்ப்பளித்திருக்கிறதென்று உற்சாகம் கலந்த உணர்ச்சியோடு சுந்தரம் கூறுகிருர்

இன்று சுந்தரத்திடம் காணும் கரை காண முடியாத பொறுமையும், சரிசமமாக யாவரிடமும் பழகும் தன்மையும் நிமிடம் தவருமல் தன் அலுவல்கள் செய்யும் பாங்கும் சிறையிலேதான் வேரூன்றியிருக்கும் என்பதை நாம் அறிகிறோம்.

ஆறு மாத சிறை வாழ்வில் இவர் மாற்றப்பட்ட ஊர்கள் திருச்சியைத்தவிர கோவையும் சென்னை சிறைச்சாலையும். பலவகைப்பட்ட அனுபவத்தோடு சிறையிலேயே "இந்தியும்" காந்தியின் அறப்போர் தத்துவத்தையும் கற்றுக்கொண்டார்.

தகட்டுத்துண்டுகளினல் கத்தாழைச் செடிகளின் தோலைச் சுரண்டி நார் உரித்தும், புத்தகங்களை பைண்ட் செய்தும் மிகுதியான நேரத்தைக்கழித்திருக்கிருர்.

ராஜாஜியையே தன் அரசியல் குருவாக வரித்துக்கொண்டார். அவருடைய அறிவுக் கருத்துக்களை தன் தியாக உள்ளத்தில் குழைத்து சமுதாயத்திற்காகவும் நாட்டின் நல்வாழ்விற்காகவும் தன்னை அர்ப்பணித்துக் கொண்டார்.

End will not justify Means என்பதே என் கொள்கையென்று ஆணித்தரமாக தன் பொதுவாழ்வில் கூறி வருகிருர்.

ஒரு லட்சியம் உன்னதமாகயிருக்கலாம். ஆனல் அதை அடைய கடைப்பிடிக்கும் வழிமுறைகளும் தூய்மையாக இருப்பது மிக மிக அவசியம். இது இரண்டும் இணைந்து செயல்படும் போது அது ஒரு "இறைப்பணி" ஆகிறது. இறைப்பணி என்றுமே தோல்வி கண்டதில்லை என்பதே இவரது சித்தாந்தம்.

சிறு வயதிலேயே ஆண்டாள் பாட்டைப் பாடி ஆனந்தப்பட்டவர் இவர்.

இயற்கையின் அழகை, மலரிலும், வனப்புமிக்க காட்சிகளிலும் உயிர் இனங்களிலும் ஊடுருவிப் பார்த்து ரசிக்கும் உள்ளம் கொண்டவர்.

வீட்டிலே அணிலை வளர்த்து ஆனந்தப்படும் இந்த உள்ளம், மதராஸிலுள்ள குதிரைச் சிலையின் கலையழகில் மனதைப் பறிகொடுத்தது.

அரசியல் கண்ணேட்டத்துடன் மட்டும் திருப்தியடைய விரும்பினல் சுந்தரத்தின் அறப்போர்மரபினை மட்டும் வியந்து வியந்து பாராட்டுவதோடு நின்றுவிடக்கூடும். ஆனல் அவர் தலைசிறந்த தொழில் வல்லுனர், கல்வி, கேள்வி, ஞானம் படைத்தவர்.

அவர் பொதுப் பணியிலே ஒரு கடுமையான சொல், ஒரு நேர்மையற்ற செயல், ஒரு சுயநலத் திட்டம் இருந்ததில்லை.

தான் ஈடுபட்ட எல்லாத்துறையிலும் தனி முத்திரையைப் பொறித்தவர்.

அவர் சேவை நாடெங்கும் மணம் வீசட்டும்! பணி தொடரட்டும்! △


*With the best compliments from:*

**MOPEDS INDIA LIMITED**

**Manufacturers of 'SUVEGA' MOPED, 50cc.**

**In Collaboration with M/s. MOTOBECANE, Pantin, France**

*Central Office:*
No. 1, V. Palaniswamy Naidu Street
Avanashi Road
**COIMBATORE-18**
Phone: 24051, 24052 & 30925
Grams: 'MOPEDS'

*Regd. Office & Factory:*
Tirupathi – Renigunta Road
P. B. No. 11
**TIRUPATHI (A. P.)**
Phone: 55, Renigunta
Grams: 'MOPEDS'



# புலவருடைய திறம்

திருமுருக கிருபானந்தவாரியார்

ஒரு தேசத்திற்குப் புகழ் புலவர்களால் விளைகின்றது; சிறந்த புலவர்கள் இருந்து நாட்டை அலங்கரிக்கின்றார்கள்; மேலும் புலவர்கள் திறமையாகப் பாடுவதிலும் திறமையாகப் பேசுவதிலும் வல்லவர்கள். அக்காலத்துப் புலவர்கள் தேனூறும் பாடலுக்கு மன்னர்கள் வாயூறி நின்றார்கள். மன்னவர்கள் மட்டுமா? ஆண்டவன் கூட.

"பாவலான் ஒருவன் செந்தமிழ்க் கிரங்கி
பரவையார் ஊடலை மாற்ற
ஏவலா ளாகி இரவெலாம் உழன்றான்"

ஏகநாயகனாகிய எம்பெருமான் என்றால், பாவலர் பெருமை பாட்டுக்கும் ஏட்டுக்கும் அடங்குமோ?

சொக்கநாதப் புலவர் என்ற ஒருவர் மதுரையில் இருந்தார். அவர் திருமலை நாயக்கர் காலத்தவர். அவர் பல பாடல்கள் பாடியிருக்கின்றார். ஒவ்வொரு பாடலும் சுவை மிகுந்தது. சொல் நடை, பொருள் நடையுடன் கூடியது.

சொக்கநாதப் புலவர் ஒரு சமயம் திருக்களந்தை என்ற திருத்தலஞ் சென்றார்.

சுவாமி திருமுன் நின்று அழகாகப் பாடினார். சிவலிங்கத்திலிருந்து ஒரு குரல் எழுந்தது.

"அன்பனே! உனக்கு என்னவரம் வேண்டுமோ கேள்."

இந்தக் குரலைக் கேட்டவுடனே புலவர் திடுக்கிட்டுப் போனார். எம்பெருமான் திருவருளை எண்ணினார். அவர் கண்களிலிருந்து விண்மாரி என நீர் வழிந்தது; சொல் குழறியது.

ஆண்டவனிடம் அவர் என்ன கேட்டார்? அழிகின்ற பொன்னையும், பொருளையும் நிலபுலன்களையுமா கேட்டார்! இல்லை இல்லை.

நிரம்பிய பொன்னும், பொருளும், நிலபுலன்களும் உடையவன் மகிழ்ச்சியாகவும் திருப்தியாகவுமா இருக்கின்றான்? செல்வம் உயர உயரக் கவலைகள் உயருகின்றன. மன்னாதி மன்னரும் கவல்கின்றார்கள்; பெரிய கோடீஸ்வரர்கள் மனச்சாந்தியின்றி வருந்துகின்றார்கள்.

ஆதலால் அறிவு நிறைந்த புலவர்பெருமான் அல்லலுக்கு உறைவிடமான செல்வத்தை வேண்டினாரில்லை.

அவர் வேறு என்ன வேண்டினார்! இறைவன் நமது உள்ளத்தில் வந்து இருப்பதுவே மேலான இன்பம் என்று கருதினார்.

ஒரு மாகாணத்துக் கவர்னர்-அல்லது முதன் மந்திரி நமது வீட்டில் வந்து சில நேரம் தங்கிவிட்டுச்சென்றால், அதற்கு எவ்வளவு பெருமை ஏற்படுகின்றது.

அகிலாண்ட கோடி பிரமாண்ட நாயகனை எம்பெருமானை நமது உள்ளத்தில் எழுந்தருளினால் அதைவிட மேலான ஒரு பெரும் பேறு இருக்க முடியுமா? அதுவே பேரின்பம் என்றெல்லாம் அவர் எண்ணினார்.

"சுவாமீ! கருணைக்கடலே! தேவரீர் என் உள்ளத்தில் எழுந்தருளியிருக்க வேண்டும்" என்றார்.

இறைவன் புலவருடன் வேடிக்கையாகப் பேசுவதை விரும்பினார். "அன்பனே; இதோ இந்தத் திருக்களந்தைக் கோயிலிலே இருக்கின்றேன். இங்கு என்பால் பல அடியார்கள் இடையறாது வந்து வந்து வழிபட்டு வரம் பெறுகின்றார்கள்; இதனை விடுத்து உன் உள்ளத்தில் நான் எப்படி வர இயலும். அப்படி வந்து தங்கினால் இங்கு வருகின்ற அடியார்கட்கு ஏமாற்றமாகிவிடும். ஆகவே நீ கேட்ட வரத்தின்படி நான் உன் உள்ளத்தில் எப்போதும் தங்கியிருக்க முடியாது" என்றார்.

புலவர் இந்த வாசகத்தைக் கேட்டார். இறைவன் எங்கும் தங்கும் நிறையுடையவன். பல்வேறு வடிவும் பல்வேறு செயலும் பூண்ட பரிபூரணன். எனினும் இறைவன் 'நான் திருக்களந்தைக் கோயிலில் இருக்கின்றேன். உன் உள்ளத்தில் எவ்வாறு வந்து தங்குவேன்' என்று கூறியதனால் நாமும் சமர்த்தாகத்தான் கூறவேண்டும் என்று கருதினார்.

"ஆண்டவனே! நீர் இரண்டு இடங்களிலும் ஏக காலத்தில் இருக்க ஒரு வழி கண்டு பிடித்திருக்கின்றேன். அது என்ன வழி தெரியுமா? கூறுகின்றேன் கேளும்!

"நீர் முன்னம் உமது திருமேனியில் இடப்பாகத்தை என் தாய் உமாதேவிக்குத் தந்தீர். அவருடைய வலப்பாகத்தைப் பெற்றுக்கொண்டீர். அந்த வகையில் உமது திருமேனியில் இடப்பாகமும் அம்மையின் வலப்பாகமும் சேர்ந்து இப்போது இங்கே காட்சியளிக்கின்றீர்!

ஐயனே! இனி உமது திருமேனியில் மற்றைப் பாதியும் அம்மையின் மேனியில் ஒரு பாதியும் உண்டல்லவா! அந்த இரண்டும் சேர்ந்தால் ஒரு உருவம் ஆகுந்தானே? அப்போது இரண்டு வடிவங்கள் ஆகும்; ஒன்று திருக்களந்தைத் திருக்கோயிலில் இருக்கட்டும். மற்றொன்று அடியேன் மனக்கோயிலில் இருக்கட்டுமே" என்றார்.

புலவருடைய சொல் திறத்தைக் கேட்டுப் பெருமான் பெருமகிழ்ச்சியுற்றார். அவருடைய உள்ளக் கோயிலில் எழுந்தருளி அருட்காட்சி தந்தருளினார். வர் பாடிய அற்புதமான பாடல் இதோ.

**ஆகத்திலே யொருபாதி யென் னம்மைக் களித்தவன் தன்**
**பாகத்திலே யொன்று கொண்டாய்; அவள் மற்றைப் பாதியும் உன்**
**தேகத்திலே பாதியும் சேர்ந்தால், இருவர் உண்டே; சிவனே**
**ஏகத்திராமல் இருப்பாய் களந்தையும் என்னெஞ் சுமே.**

## மணிவிழா வாழ்த்து

★ ★ ★

நேரிசை வெண்பா.

**மூவிருப தாண்டு முகுந்தன் திருவருளால்**
**பூவுலகில் வாழ்சிறந்த புண்ணியன் - மேவுபுகழ்**
**சுந்தரவேள் சுற்றத்தார் சூழ சுகமுடனே**
**சந்ததமும் வாழ்க தழைத்து.**

— கிருபானந்தவாரியார்

# சுதந்திரப் பறவை





கோவை நகராட்சிக் கலையரங்கில் 15—10—74 அன்று நிகழ்ந்த பாராட்டு விழாவில் திருமதி சந்திரகாந்தி கோவிந்தராஜுலு அவர்கள் நிகழ்த்திய உரை.

பெருமதிப்பிற்குரிய விழாத் தலைவர் கம்பன் அடிப்பொடி திரு. கணேசன் அவர்களே, தமிழ் நாட்டின் சத்தியத்தின் சின்னமாக விளங்கும் எங்கள் பெருமதிப்பிற்குரிய திரு. சுந்தரம் அவர்களே, அன்பிற்கும், அமைதிக்கும், பொறுப்பிற்கும், பொறுமைக்கும் சின்னமாக விளங்கும் திருமதி தாயாரம்மாள் அவர்களே! விழாவைச் சிறப்பாக நடத்திக்கொடுக்க வந்திருக்கும் பெருமக்களே!

இன்று அருட் செல்வமும், பொருட் செல்வமும் சேர்ந்து சிந்தனைச் செல்வத்தையும், செயல் செல்வத்தையும் கொழிக்க வைக்கும் தென்னாட்டு மான்செஸ்டர் என்று பிரசித்தி பெற்று விளங்கும் கோவை மாநகரிலே, அன்று ஐம்பது ஆண்டுகளுக்கு முன்பு எந்தவிதமான வசதியோ, வாய்ப்போ இல்லாத காலத்திலேயே பலவகையான தொழில்களின் ஆக்கப் பணிகளுக்காக பல்லாயிரக்கணக்கான பேர் வாழவேண்டும் என்ற பரந்த நோக்கத்தோடு தமது செல்வத்தைப் பங்கிட்டு பஞ்சு, நூல், இயந்திரங்கள் போன்ற பல பெரிய தொழில்களுக்கு வித்திட்ட வித்தகரும், கோவை மாநகரம் தொழில் துறையில் சிறப்பாக முன்னேற காரணகர்த்தாவாக இருந்த தந்தையும், தமிழ் நாட்டில் தொழில்வளம் மிகச் சிறப்பாக உருவாக காரணகர்த்தாவாக இருந்த சிற்பியுமான பெருமதிப்பிற்குரிய திரு. குப்புசாமி நாயுடு அவர்களுடைய குடும்பத்தில் பிறந்தவர், கொடை வள்ளலும், தொழில் மேதையுமான திரு. சுந்தரம் அவர்கள். அன்னசத்திரம் ஆயிரம் வைத்தலும், ஆலயம் பதினாயிரம் நாட்டலும், புண்ணியச் செயல்களே. அவையாவினும் ஆயிரம் கோடி புண்ணியம் ஆங்கோர் ஏழைக்கு எழுத்தறிவித்தல் என்ற மகாகவி பாரதியாரின் கனவை நனவாக்க அன்றே அறச்சாலைகள், ஆலயங்கள், அன்னசத்திரங்கள், எழுத்தறிவிக்கும் கலைக்கோயில் பலவற்றை நிறுவிய பண்பட்ட குடும்பத்தில் பிறந்த மேதை திரு. சுந்தரம் அவர்கள்.

அன்று கோவை மாநகரம் தொழில் துறையில் மிகச் சிறப்பாக முன்னேற மூல காரணகர்த்தாவாக இருந்த பெரியார் திரு. குப்புசாமி நாயுடு அவர்கள் இட்ட அந்த வித்தானது அந்தக் காலத்திலேயே சிறந்த வித்தாகி, முளையாகி, விளைவதாகி, விளைவிக்கும் பொருளாகி இன்று கொத்தாகி, பயனாகி, குறைவில்லாத நிறை பொருளாகி சென்ற 25 ஆண்டுகளுக்கும் மேற்பட்டு உலகம் போற்றும் தொழில் ஸ்தாபனங்களுள் ஒன்றாக

விளங்கும் குப்புசாமி நாயுடு தொழில் ஸ்தாபனங்களும், தர்ம ஸ்தாபனங்களும் மிகச் சிறப்பாக மேன்மை அடைந்து, பிரசித்தி பெற்று விளங்குவதற்கு முக்கியமான சிற்பி-களில் மூல காரணகர்த்தாக்களில் ஒருவராக இருப்பவர் **சமுதாய சிற்பி திரு. சுந்தரம் அவர்கள்.**

அறிவிலே, ஆற்றலிலே, ஆக்கத் திறனிலே, தர்ம சிந்தனையிலே. பக்தி மார்க்கத்திலே, தேசப் பற்றிலே, காந்திய நெறியலே நாட்டுப்பற்று மிகுந்த காரணத்தால் கட்சிப் பற்றிலே அவை யாவற்றிற்கும் மேலாக இந்திய நாட்டின் ஞானக் களஞ்சியமாகத் திகழ்ந்த மகரிஷி ராஜாஜி அவர்களினுல் தொடங்கப்பட்ட சுதந்திரக் கட்சியிலே அறநெறி பிறழாத வழியிலே தன்னிகரில்லாத நிர்வாகத் திறமையிலே பல நல்ல உயர்ந்த காரியங்களுக்காக செல்வத்தை பிறரோடு பங்கிட்டுக் கொள்வதிலே அவனியெல்லாம் நிழல் கொடுக்கும் ஆல விருட்சமாக இருந்து பெரு வாழ்வு வாழ்ந்து காட்டும் **மனித குல மாணிக்கம் திரு. சுந்தரம் அவர்கள்.**

தைரிய லட்சுமி, தன லட்சுமி, ஜய லட்சுமி, பாக்கிய லட்சுமி, சௌபாக்கிய லட்சுமி ஆகிய தேவியின் கடாட்சம் ஆனந்தத் தாண்டவமாடும் அதிர்ஷ்டசாலி இப்பெருமகன். எப்போதும், எதற்கும், எந்த ஒரு நல்ல காரியத்திற்கும் எண்ணி-யதை, எண்ணிய மாத்திரத்தில், எண்ணியபடி செய்துமுடிக்கும் திறமை பெற்ற **சுதந்திரப் பறவை திரு. சுந்தரம் அவர்கள்.**

தீர்க்கதரிசி திரு. சுந்தரம் அவர்களும், அவரது சகோதரர்களும் இந்தியாவின் தொழில் துறையில் முன்னணியில் நின்று ஐம்பது ஆண்டுகளுக்கும் மேற்பட்டு மிகப் பிரகாசமாக பிரசித்திபெற்று விளங்குவதோடு வேலையற்ற பல்லாயிரக்கணக்கான மக்களின் பிரச்சினைகளுக்கு வாழ்வு காண, பக்ரா, பவானி அணைகளைப் போல மிக மிகப் பெரிய பெரிய திட்டங்களான விஸ்கோஸ், மிஷின் ஒர்க்ஸ் போன்ற திட்டங்களை நிர்மாணிக்க பல கோடிக்கணக்கான ரூபாய்களை செலவு செய்து அமோகமாக தொழில் வளத்தைப் பெருக்கியிருப்பதோடு மருத்துவத் துறையிலேயும் 25 ஆண்டுகளுக்கு முன்பே, அதுநாள் வரை வேறு ஒருவருமே செய்யாத, செய்ய முடியாத மகத்தான மகப்பேறு மருத்துவ நிலையத்தை தமது தந்தை திரு. குப்புசாமி நாயுடு அவர்கள் நினைவாக நிறுவி ஒவ்வொரு ஆண்டும் பல்லாயிரக்கணக்கான பெண்களுக்கும், குழந்தைகளுக்கும் நல்ல ஆரோக்கியமான வாழ்வு அளித்து வருவதோடு, இப்பொழுது அந்த சிறப்பு மிக்க மருத்துவ மனையோடு சேர்த்து, தமிழ் நாட்டில் வேறு எந்த மாவட்டத்திலும் இல்லாத புற்று நோய் நிலையத்தையும், இருதய நோய் சம்பந்தப்பட்ட நிலையத்தையும் ஏற்படுத்தி, அவைகளுக்கு வேண்டிய மிகமிக சக்தி வாய்ந்த பல்வேறு நவீன கருவிகளை நிறுவி இருப்பதோடு, இப்போது அவற்றிற்கெல்லாம் சிகரம் வைத்தாற்போல சிறப்பாக குழந்தைகளுக்காகவே தனிப்பட்ட முறையில் சிகிச்சைப் பிரிவு ஏற்படுத்தியிருப்பதுடன், தொழில் துறையிலும் மருத்துவத் துறையிலும் மட்டும் மக்களுக்கு நல்லது செய்தால் போதாது, மனிதனின் ஜீவநாடியாக விளங்கும் அறிவுத் துறையாகிய கல்வித் துறையிலேயும் சிறந்த நல்ல காரியங்களைச் செய்து முடிக்க வேண்டும் என்ற உயர்ந்த நோக்கத்தோடும் சிறப்பாக உயர்நிலைப்பள்ளிகள், கல்லூரி போன்றவற்றை ஏற்படுத்தி, நாட்டின் எதிர்காலப் பிரஜைகளாகிய நன்மக்களை உருவாக்கி வருவதும், 'ஒயசிஸ் இன் தி டெசர்ட்' (oasis in the desert) என்பதைப் போல கோவையிலும், அதன் 100 மைல் சுற்று வட்டாரத்திலுமுள்ள பல லட்சோப லட்ச மக்களின் பசுமையான வாழ்க்கைக்குப் பாலைவனச் சோலையாக அமையும்படி பாடுபட்டு வரும் பெருமக்கள் **கொடை வள்ளல்கள் திரு. சுந்தரம் சகோதரர்கள்.**

அப் பெருமக்கள் இந்தியாவின் புனிதமான வற்றாத பஞ்ச நதிகளாகிய மிகப் பெரிய ஜீவ நதிகள் பிரசித்தி பெற்று விளங்குவதோடு மக்களால் பெரிதும் விரும்பப்

பட்டு நாட்டின் பண்பாட்டிற்கும், கலாச்சாரத்திற்கும், சுபிக்ஷத்திற்கும் சின்னமாக விளங்கி கடந்தகால நினைவில் தோன்றி, நிகழ்கால நனவாக ஓடி, எதிர்காலக் கனவுக் கடலில் கலக்கச் செய்யும் ஜீவ நதிகள் மக்களின் சேமமான வாழ்க்கைக்கு வழிவகுத்து நாட்டை வளப்படுத்திக் கொண்டே இருப்பதைப் போல திரு. சுந்தரம் அவர்களும், தென்னாட்டு மக்களின் பசுமையான வாழ்க்கைக்கு சிறப்பாக வழிவகுத்து மக்களால் பெரிதும் விரும்பப்பட்டு, பிரசித்தி பெற்று விளங்குவதோடு, தமிழ் நாட்டின் பண்பாட்டிற்கும், சுபீட்சத்திற்கும் சின்னமாக விளங்கி தமிழ் மக்களின் கடந்தகால நினைவில் என்றென்றும் நிலைத்தவராக, அவர்களது நிகழ்கால சுபீக்ஷத்தின் நனவாக, அவர்களது எதிர்கால வாழ்வு சிறப்பாக வளம்பெற வழிவகுத்துக் கொடுக்கின்ற, நாடு போற்றும் **பண்பு நிலையம் திரு. சுந்தரம் அவர்கள்.**

நாட்டின் விடுதலைக்காக உயிர்த்தியாகம் செய்த உத்தமர்கள், தியாகிகள், துடித்தெழுந்த தேசபக்த சிங்கங்கள், கர்ம வீரர்கள் ஆகியோர்களது நெஞ்சத்திலே சுதந்திரக் கனலின் தகிப்பால் தேசீய எழுச்சி எனும் பயங்கரப் பாதையானது உருவாகி அதுவே பஞ்சலையாகி, அவர்களை சுட்டுப் பொசுக்கவும், தூக்கு மேடை ஏறவும், கடுமையான சிறைவாசம் அனுபவிக்கவும் செய்த மகத்தான சத்தியத்திற்குட்பட்ட **அந்தக் காலத்துக் காங்கிரஸ் கட்சியைச் சேர்ந்தவர் திரு. சுந்தரம் அவர்கள்.** கொந்தளித்து நிற்கும் போர்க் கடலிலே சுதந்திரக் கப்பலுக்கு ஆபத்து என்ற அறிகுறி தோன்றினால், நாட்டிலுள்ள அத்தனை பேரும் ஒன்றுசேர்ந்து ஜாதி,மத,இன,நிற வேறுபாட்டையெல்லாம் மறந்து, தேசாபிமானம் என்ற தீட்சையிலே புடம்போட்டு கொடுங்கோலின் கோரத் தாண்டவத்தைத் தகர்த்தெறிய சக்திக் கனல்கள் மூச்சு முடியும்வரை போராடிய மகத்தான, உன்னதமான சத்தியத்திற்கு உட்பட்ட கட்சியைச் சேர்ந்தவர் திரு. சுந்தரம் அவர்கள். வேதாரண்ய சத்தியாகிரகத்தில் மிகத் தீவிரமாக ஈடுபட்டு சிறைசென்ற தியாகியாக இருந்த அவர், சென்ற சில ஆண்டுகளுக்கு முன்பு அத்தகைய புனிதமான கட்சியை விட்டு விலகி, சுதந்திரக் கட்சியில் சேர்ந்து இருப்பதாவது, அதாவது தர்மத்திற்கும், சத்தியத்திற்கும், வீரத்திற்கும், வெற்றிக்கும், நேர்மைக்கும், சாத்வீகத்திற்கும் ஆணிவேராக அமைந்திருந்த அன்றைய காங்கிரஸ் கட்சியானது, பதவியேற்ற சில ஆண்டுகளுக்குப் பின்பு, படிப்படியாக கீழ்நிலைக்கு சிறிது சிறிதாக வந்துகொண்டிருந்த சமயத்தில், நாட்டின், சத்தியத்தின் சின்னமாக விளங்கிய திரு. ராஜாஜி அவர்களால் துவக்கப்பட்ட சுதந்திரக் கட்சியில் சேர்ந்து, அக் கட்சியின் ஆணிவேராக இருந்து, அதற்கு பக்க பலமாக இருந்து, ஆளும் கட்சிக்கு எதிராக அதன் ஊழல்களையும், அராஜகத்தையும் மிகத் தைரியமாக எடுத்துச் சொல்லி வருகின்ற **பெருமகன் திரு. சுந்தரம் அவர்கள்.** அதாவது, ஆளும் கட்சிக்கு எதிராக ஒரு ஸ்திரமான எதிர் கட்சி, பலமாக செயல்பட்டால்தான் அது சிறப்பாக செயல்பட முடியும் என்ற உயர்ந்த நோக்கத்தோடு செயல்படுகின்ற சிறந்த பெருமகன். Men of achievements என்ற வரிசையிலே பிரசித்தி பெற்று விளங்கும் அவரிடம் வாழையடி வாழையாக தொடர்ந்து வந்துள்ள செல்வச் சிறப்பு. அத்தகைய செல்வச் சிறப்பிலும் செருக்கற்ற சிறந்த பணிவுடைமைப் பண்பு. வசதிகள், வாய்ப்புகள் இருந்தாலும் மனிதப் பண்போடு பழகும் பெருந்தன்மை. மேலான, உயர்ந்த வாழ்க்கைச் சூழ்நிலையில் எளிமை. தொழில் அதிகாரச் சூழ்நிலையில் அன்பு. கல்வி அறிவு பெற்ற சூழ்நிலையில் அடக்கம். கலை வளர்த்த சூழ்நிலையில் உயர்ந்த பண்பாடு. செல்வச் சீமானாகப் பிறந்தும் உழைப்பில் மிகுந்த நம்பிக்கை. சொன்னதைச் சொன்னபடி நிறைவேற்றுகின்ற ஆற்றல். வலது கை கொடுப்பதை இடது கை அறியாத வண்ணம் செய்யும் தான தர்மம் போன்ற பெருங் குணங்கள் படைத்த நாடு போற்றும் **சாந்தி நிலையம் திரு. சுந்தரம் அவர்கள்.** அரச வாழ்விலே பேரரசராக, அக வாழ்விலே அன்பரசராக, புற வாழ்விலே அருளரசராக எண்ண வாழ்விலே அறத்தின் அரசராக, வாழ்வாங்கு வாழ்ந்த வாழ்வரசராக வாழும் திரு. சுந்தரம் தம்பதிகள், அறுபது ஆண்டு நிறைவு மட்டும் கண்டது போதாது. அதோடு அவர்கள் பல்லாண்டு, பல்லாண்டு, பல்லாயிரத்தாண்டு, பல கோடி நூறாயிரம் ஆண்டு வாழ எல்லாம்வல்ல இறைவனைப் பிரார்த்தித்து, அவர்களுக்கு மீண்டும் என்னுடைய மனமார்ந்த வணக்கத்தை ஒருமுறை செலுத்துகின்றேன். □

# வாய்மைக்கு அறுபது!

திரு. ஜி. கே. சுந்தரம் அவர்கள் ராஜாஜியின் பெருமதிப்புக்கும், அன்புக்கும் பாத்திரமான வர் என்றாலே போதும், அதற்கு அதிகமாக அவரைப் புகழ்ந்துரைக்க வார்த்தைகளே இல்லை.

அறுபதாண்டுகள் நிரம்பப்பெறும் திரு. சுந்தரம் உண்மையே மனித உருக்கொண்டு வந்ததுபோல் திகழ்கிறார். இதனைப் பாரதம் முழுவதும் தொழில் வர்த்தக வட்டாரம் மட்டுமின்றி அதிகார வர்க்கமும் நன்கு அறியும்.

சாதாரணமாக ஒரு நிறுவனத்தின் ஆண்டறிக்கை சமர்ப்பிக்கப்படும் பங்குதாரர்கள் கூட்டத்திற்கு எல்லாப் பங்குதாரர்களும் வர மாட்டார்கள். அதில் சிரத்தை காட்டுபவர்கள் சிலர் மட்டுமே இருப்பார்கள். ஆனால் லக்ஷ்மி மில்ஸ் பங்குதாரர் கூட்டமென்றால் ஏதோ கோலாகலத் திருவிழா போல் அனைவரும் வந்து மொய்ப்பார்கள். பங்குதாரர்களுக்கு நிர்வாகத்தினரிடம் அத்தனை அன்பு, மதிப்பு.

தொழில் துறையில் அரிய சாதனைகள் புரிந்து மிக உயர்ந்த நிலைக்கு வந்துள்ள திரு. சுந்தரம் எளிய வாழ்க்கையே நடத்துகிறவர். அடக்கமும் அமைதியும் அவர் சுபாவமாகவே பெற்றவர்.

செல்வத்தின் பயன் பிறருக்கு உதவுவதிலேதான் இருக்கிறது என்பதை நன்கு உணர்ந்துள்ள இந்தப் பேரறிவாளன் திரு, ஊருணி நீராக விளங்குகிறது. மருத்துவமனை, பள்ளிக்கூடம் போன்ற பல தர்ம காரியங்களுக்கு அறக்கட்டளைகள் நிறுவியுள்ளார்.

இப்படிப்பட்ட காந்தியச் செம்மல், ராஜாஜியின் உள்ளத்தை ஈர்த்ததில் வியப்பென்ன? 'சுதந்திராக் கட்சியின் நோக்கம் ஆட்சியைக் கைப்பற்றுவதாக இருக்கக் கூடாது; ஜனநாயகக் கோட்பாடுகளையும் சுதந்திரப் பொருளாதாரத்தின் மேன்மையையும் மக்களுக்கு எடுத்துக்கூறி அவர்களைப் பொறுப்புள்ள பிரஜைகளாக மாற்றுவதே அதன் முதல் கடமையாக இருக்க வேண்டும்' என்ற ராஜாஜியின் அறிவுரையை சிரமேற்கொண்டு அவர் இயங்கி வருகிறார்.

திரு. ஜி. கே. சுந்தரத்துக்கு மணி விழா எடுக்கும்போது நாம் அன்பையும், உழைப்பையும், வாய்மையையும், ஈகையையும் போற்றிக் கொண்டாடுகிறவர்களாகிறோம்.

கல்கி
சென்னை-31
*4—10—74*

சதாசிவம்

# G. K. S.—ன்
# உள்ளம் ஒரு பெருங்கோயில்

* * * * * * * * * * * * * * * * * * * * *

> மாபெரும் செயல்களை நிறைவேற்றும் திறன்வாய்ந்த நமது வாழ்க்கை பெருமதிப்புடையது. குறிக்கோளுடைய வாழ்க்கையில் இயக்கம் உண்டு; குறிக்கோளற்ற வாழ்வு தட்டுத்தடுமாறும். மனிதர் அறத்தை ஏற்றுக் கொண்டாலும் ஏற்றுக் கொள்ளாவிட்டாலும், தனது நிலையைப் பற்றிச் சிந்தித்துத்தான் ஆகவேண்டும். சஞ்சல மனப்பான்மையால் எதையுமே சாதித்துவிட முடியாது.
>
> —முனிவர் நத்மல் அவர்கள்

இன்பம் அற்பமானது, ஆழமில்லாதது. துன்பம் ஆழமானது, ராட்சச வடிவுடையது. நன்மைகளையும் எண்ணத்தினவுகளையும் ஒருவருக்கொருவர் பரிமாறிக் கொள்ளவே மொழிகளும், பேசும் ஆற்றலும் ஆகும். உலகம் தோன்றிய நாள் முதலாக இன்றும் நாளையும் முடிய நாம் பேசிக்கொண்டே இருக்கிறோம். பேசியதெல்லாம் இன்பமாயின் துன்பத்தின் நிழல்கூட தேய்ந்து மறைந்திருக்கும்.

நன்மைகள் செய்யமுடியாத ஒன்று நம்மிடையே மதிக்கப்படுகின்றது என்பதைக் காணும்போது, ஆம்! பேச்சுக் கலையைத்தான் குறிப்பிடுகிறேன், நாணம் உண்டாகவில்லை. தந்தை தாய் இன்றேல் நாமில்லை, பின்னொரு சமயம் இவர்களைப் பழித்துப் பேசுகிறோம், ஏன்? இன்பமானவற்றைக் கண்டு மகிழும்போது பெற்றவர்களின் தியாகத்தை நாம் நினைக்கிறோமா? துன்பம் ஏற்படும் காலை பெற்றோரைப்பழிப்பதற்குத் தவறுவதில்லை. உலகம் அமைதியானதே, அதனிடம் குடிபிறந்துள்ள அமைதியை ஜீவன்களாகிய நாம் அதன் மணிவயிற்றைக் கீறிப்பிளந்து அமைதியைக் கெடுத்து விடுகிறோம்.

அத்தனை பாபங்களையும் செய்யத் தூண்டுவது எது, அல்லது யார்? ஆம் நாம் இன்பமானது என்றெண்ணிக்கையாளும் கருவியான பேச்சுதான் காரணம். தனவந்தர் என்று நம்மால் மதிக்கப்பெரும் மனிதன் என்ன வைத்துள்ளான். அமைதியான இவ்வுலக இயற்கையைப் பாழ்படுத்தும் கொடிய கருவியான பணத்தை வைத்துள்ளான் என்பதை நாம் ஏன் உணரவில்லை! வைத்திருக்கவேண்டிய பொக்கிஷம் என்ன என்பதைக் கண்டறிய என்றாவது துணிவு பெற்றுள்ளோமா? இல்லையே! ஏன்? நாம் மௌனமாக இருப்பதில்லை. எனவே நமக்கு துணிவில்லை. "பேசாத்தனமே, பெருந்தனம்" என்றனர் ஆன்றோர்கள். சாந்தியின் சொரூபம் எனப்படுவதின் தாத்பரியமே மௌனத்தின் உள்ளடக்கமாகும்.

> நாம் விழித்தெழுந்து உலகத்தை அதன் உண்மை நிலையில் கள்ளம், கபடமின்றி நோக்கவேண்டும். உலகை நாம் எவ்வளவிற்கு நன்மைக்காகப் பயன்படுத்திக் கொள்ள முடியுமோ அவ்வளவிற்குப் பயன் படுத்திக்கொள்ள வேண்டும். அப்பொழுது உலகம் நாம் விரும்புகின்ற அளவிற்கு நல்லதாக இல்லாவிட்டாலும் மற்றவர்கள் இக் காலங்களில் அதனை ஆக்கியுள்ளதைவிட நன்றாக இருக்கும். நல்ல உலகம் என்பதற்கு அறிவு, கருணை மற்றும் தைரியம் என்று பொருள். கடந்த காலத்தை எண்ணி வருந்துவதோ அல்லது சுதந்திர அறிவை கள்ளங் கபடமற்ற மனிதர்கள் பல்லாண்டுகட்கு முன் கூறிய சொற்களை அடிப்படையாகக்கொண்டு அடிமைப் படுத்துவதோ அதற்குத் தேவையில்லை.
>
> —பெர்ட்ரண்ட்ரஸ்ஸல்

கடவுளை வணங்கிட வேண்டின் மௌனத்துடன் தியானித்தல்வேண்டும். கோப தாபங்களின் மூட்டத்தால் அதிர்ந்திடும் உள்ளத்தை, உடலை நிலைப்படுத்திடவேண்டின் மௌனம் கொண்டிட வேண்டும். பிரச்னைகளை குறைத்திடவும் உறுவாக்கிடவும் மௌனமே அரும் மருந்தாகும்.

காலத்தை வென்றிட்ட காந்தியும், ராஜாஜியும் உண்டிட்ட நல்மருந்து மௌனமே யாகும்.

